

# தமிழ் நண்பர்கள்

தமிழும் தமிழ் சார்ந்த நண்பர்களும்...

tamilnanbargal.com

## மின் இதழ்

தை மாதம் விஜய வருடம்

# இம் மின் இதழில் ...

*வணக்கம் நண்பர்களே!*

*தமிழ் நண்பர்கள் இணையதளத்தில் ஆர்வமுடன் பங்கேற்று தங்கள் படைப்புகளை பகிர்ந்தும் நட்புறவாற்றியும் தமிழைக்கொண்டாடும் அனைவருக்கும் வணக்கம்.*

*இம்மின் இதழ் மூலமாக அனைவரையும் சந்திப்பதில் மகிழ்கிறோம்.*

*தமிழ் நண்பர்கள் தளத்தில் தொடர்ந்து புதிய வசதிகளை அறிமுகப்படுத்தியும் பிழைகளை அறிந்து திருத்தியும் வருகிறோம். பிழை காண்பின் தயவுடன் தெரிவிக்கவும்.*

*இணைந்து செயல்படுவோம்.*

*அனைவர் வாழ்வும் தமிழுடன் நலமாகட்டும்.*

## விவாதிக்கலாம் வாங்க...

## ஜாதி ரீதியிலான இட ஒதுக்கீடும் சலுகையும் தேவையா?

இன்றைய காலகட்டத்தில் சாதியை வைத்து பொருளாதாரத்தையோ கல்வியையோ அளவிடமுடியாத நிலை இருக்கும் போது

எந்த ஒதுக்கீட்டிலும் சாதிக்கு இடம் இருக்கக்கூடாது சாதியே தேவையில்லை என்ற கருத்து பெருகிவரும் இவ்வேளையில்

**ஜாதி ரீதியிலான இட ஒதுக்கீடு முறை நீடிக்கும்** என்று, காங்கிரஸ் தலைவர் சோனியா அறிவித்ததையும் அதை திராவிட கழகங்களும் கருணாநிதியும் வரவேற்கத்தக்கது எனவும் கூறியிருப்பது எதைக்காட்டுகிறது?

ஏன் இன்னும் சாதி அவர்களுக்கு தேவையாய் இருக்கிறது?

பொருளாதார அடிப்படையில் சலுகை இருந்தால் என்ன?

கல்வி அடி்படையில் இட ஒதுக்கீடு ஏன் இருக்கக்கூடாது?

சாதியை வைத்து ஒருவருக்கு வாய்ப்பு கிடைப்பதோ அல்லது கிடைக்காமல் போவதோ கீழ்த்தரம் இல்லையா?

இவ்வாறு நடந்துகொள்வது சாதி எதிர்ப்பு என்ற போலித்தன்மையை வெளிச்சம் போட்டு காட்டுகிறதே?

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

உங்கள் கருத்துகளை பதிய முகவரி tamilnanbargal.com/node/55341

# விட்டு விடேன் என்னை (நீ) வாழ..

நற்புவி மகேந்திரன்

நண்பா..!
ஏன் எனைக்
கொன்றிடத் துணிந்தாய்..?
நான் இறந்தாலிங்கு
நீ இறப்பாயே
தலையசைத்தே
உனக்குத்
தண்ணீர் தந்தேன்.
தகிக்கும் பொழுதினில்
நிழலைத் தந்தேன்
சுவாசிக்க
உயிர்க் காற்றினைத்
தந்தேன்
சூழலைக்
குளுமையாய்
மாற்றியும் தந்தேன்

என் தோழன்
கார்மேகனனை
இழுத்து வந்து
இருப்போர்க் கெல்லாம்
உணவைக் கொடுத்தேன்.

வேறென்னக் கொடுமைகள்
நான் இங்கு செய்தேன்
நண்பா..ஏன் எனைக்
கொன்றிடத் துணிந்தாய்..?

போகட்டும்..
உனக்காகத் தானிங்கு
நானே
இறந்தாலும்
உன் உறவாகவே
எந்நாளும் இருப்பேனே.

உன் பிள்ளைக்கு நானே
தொட்டிலும் ஆவேன்
உனக்கென நானே



கட்டிலும் ஆவேன்
உன் வீட்டுக்கு
நல்ல கதவென
இருப்பேன்.

நீ இசைத்திட
ஒரு இசைக் கருவியும்
ஆவேன்.
நீ இறந்திட்டால்
உனை சுமக்கும்
பெட்டியுமாவேன்.
இல்லையேல்
உனை எரிக்க
விறகுமாவேன்

என் கடன் எப்படியாயினும்
தீரும் ..ஆனால்
உன் கடன் தீர்த்திட
நீ வேண்டும் நண்பா..!

ஆகையினால் தான்
வேண்டுகிறேன் உனை
விட்டு விடேன்
சில காலம் என்னை
உன் இனத்தை
வாழ்விக்க
என் இனத்தை
விருத்தி செய்தப் பின்
நானே ....
விரும்பி சாகிறேன்....!



# விறகல்ல வீணை!!!

தாமரைச்செல்வன்

காமத்தின் சுவை தேடி
விலைமகளின் அவை நாடி
இளைஞன் வந்தான் ஓடோடி!!!

விலை கொடுத்தும் – அதிக
விலை கொடுத்தும்
விழியில் ஒளியில்லாமல்
விறகாய் வீழ்ந்திருந்தாள்
அலட்சியமாய் !!!.

o o o

நிந்திக்க வந்தவன்
சிந்தித்து நின்றான்
தழுவ வந்தவன்
தயங்கி நின்றான்

அலட்சியம்
இஷ்டமில்லை என்பதாலோ!
இன்பமில்லை என்றுணர்ந்தாளோ!
இவளுக்கு
ஈடில்லை என்ற ஏளனமோ!!
குழம்பி தவித்தான்.

o o o

உறவாட வந்தவன்
உறையாடி பார்த்தான்

உடல் தூண்டி
பார்த்தவர்கள் மத்தியில்
உள்ளம் தூண்டி
பார்த்தான்

o o o

உள்ள கிளர்ச்சியில்
உச்சம் பெற்று
உண்மை உளறினாள் . . .
மெழுகு உடல்
என்பதால்
மேனிகாட்ட
வரவில்லை !!

வளைவு சுழிவு
உள்ளதால்
வளைத்துப்போட
வரவில்லை !!

o o o

சோறு சாறு
இல்லாமல்
சூழ்நிலையால்
வரவில்லை !!
வாழ்வியல் படித்து
வாழ்வாதாரமாய்
வேலை தேடிச்
சென்ற இடமெல்லாமல்
இவள் சேலை
தேடப் பார்த்தனர் .

o o o

வாழ்வியல்
படித்தவளாயிற்றே!!!
ஏன் என்று இவள்
தேட செல்கையில்
மீட்டெடுத்தாள்

o o o

பச்சை மாமிசத்தை
பலர் இச்சை
ஆசைக்காக
விற்கும் பச்சிளங்களை !!!
பண்டமாற்றுமுறை
மாறவில்லை போலும்
பாசம் தேவையில்லை - இங்கே
பதிலுக்கு தேவைப்பட்டது

o o o

இனிப்பைத் தேடி
வரும் எறும்புகள்
சீனி வட்டத்தால்
திருப்திகண்டு
திரும்புவதைப் போல்

தனது மேனிவட்ட
வேலிபோட்டு
காத்து நின்றாள்…
என்று
விவரம் கூறி
முடித்த அவள்
விலைபெற்ற
காரணத்தால்
விறகாய் படுத்திருந்தாள் …

o o o

அவள் விழி பார்த்து
வீதி நடந்தான்
காமம் உடலில்
இல்லை என்பதை புரிந்து
மனதில் எண்ணிக்கொண்டான்
இவள்
விறகல்ல வீணை!!!

o o o

# சாம்ராட் சம்யுக்தன்

சிவாஜிதாசன்

### பாகம் 2.

### 13. சிறையில் வைத்தியர்




கானகத்தின் ஓரம் தென்னங் கீற்றுகளால் அமைக்கப்பட்ட சிறு குடிசை. அக்குடிசையைச் சுற்றி எண்ணற்ற மூலிகைச் செடிகள்; அவற்றிலிருந்து கமிழும் வாசம் அவ்விடத்தையே மயங்க வைத்திருந்தது. பட்சிகளும் மான்களும் மயில்களும் அக்குடிசையின் ஓரத்தில் விளையாடிக்கொண்டிருக்க உள்ளே மூலிகை அரைக்கும் ஒலி வாசல் வரை கேட்டது.

அந்த ஆள் நடமாட்டம் இல்லாத பயங்கர அமைதியில், தன் வாழ்நாளில் நீண்ட காலம் மூலிகைகளுடனே கழித்துக்கொண்டிருந்தார் வைத்தியர் சாரங்கன். குஷ்டம், காயங்கள், அம்மை நோய், மாலைக்கண் இப்படி எண்ணற்ற நோய்களின் பிடியில் சிக்கித் தவித்திருக்கும் நோயாளிகளுக்கு நிவாரணியாக விளங்கும் சாரங்கனைத் தேடிப் பல மன்னர்களும் எண்ணற்ற மக்களும் வந்து போவதுண்டு. இத்துணை பெருமைக்கும் சொந்தக்காரரான அவர், எதன் மேலும் பற்றுக்கொள்ளாமல் தானுண்டு, தன் தொழில் உண்டு என்ற மனநிலையில் காட்டிலேயே வாழ்கிறார். அவர் மனதிற்கும் அது தான் இஷ்டம். காட்டில் மூலிகை பறிப்பதிலும் தன்னுடனே சீடர்கள் போலிருக்கும் பட்சிகளுக்கும் சிறு சிறு உயிர்களுக்கும் உணவளிப்பதிலேயேயும் பேரானந்தம் கொண்டார்.

காட்டினில் குதித்தோடும் அருவியில் குளித்து, தன் குடிசையைச் சுற்றியிருக்கும் மூலிகைச் செடியின் நடுவே அமர்ந்திருக்கும் பிள்ளையாருக்குப் பூஜை செய்து தன் பணியான வைத்தியத் தொழிலைச் செவ்வனவே செய்து, இறைவனுக்கும் மனிதர்களுக்கும் தொண்டாற்றி வந்த அவர், அன்று ஏதோ சொல்லமுடியா துயரில் அமர்ந்து மூலிகைச் செடிகளை ஆராய்ந்துகொண்டிருந்தார்.

அவரின் சீடன் மூலிகைகளை அரைத்தபடி தன் குரு என்ன செய்துகொண்டிருக்கிறார் என்று வாசலின் வழியே தன் பார்வையை ஓட்டியபடி இருந்தான். மூலிகைச் செடியைப் பறித்துத் தன் கையிலிருந்த கூடையில் வெறுப்பாய்த் திணித்துக்கொண்டு உள்ளே வந்த வைத்தியர் சாரங்கனை, தலையை உயர்த்தி மூலிகை அரைத்தபடியே நோட்டமிட்டான் சீடன்.



| தாமரையின் ரசிகன் | வாசகன் |
|---|---|
| கதிரவன் | காதலியின் ரசிகன் |
| தாமரை கதிரவன் ரசிகன் | காதலி |
| கவிஞன் | தாமரை முகத்தினள் ! |
| கவிஞனின் ரசிகன் | (மீண்டும் மேலே...) |
| வாசகன் | |
| | கல்பனா பாரதி |

அவர், அவனைப் பார்க்காமல் மூலிகைக் கூடையை ஓரிடத்தில் வைத்துவிட்டு சிறிய சாளரத்தின் வழியே தேடும் பார்வையை சிறிது நேரம் வீசி பெருமூச்சை வெளியேற்றித் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்ள முயற்சி செய்து கொண்டிருந்தார். அவரின் முகத்தில் தோன்றிய அறிகுறிகள், 'தன்னைத் தேடி ஆபத்தான சில பேர் வரப் போகிறார்கள்' என்ற பாவம் பரிதாபமாக படர்ந்திருந்தது. ஆனால், சீடனோ எதைப் பற்றியும் கவலையின்றி தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான்.

மாலை நேர சூரியன் தங்கமென மிளிரச் செய்திருந்த தன் பொன்னிறக் கதிர்களை மெல்ல தனக்குள் இழுத்துக்கொண்டு மலையின் நடுவே மெதுவாக

மறைந்து இருளுக்கு வழிவிட்டான். இருளும், வெண்ணிலாவையும் விண்மீன்களையும் துணைக்கு அழைக்க, அவைகளும் துணைக்கு வந்தாற்போல் வானெங்கும் பரவி தங்கள் உடலை மின்னிக் கொண்டு பூமியைப் பார்த்துக் கொண்டிருந்தன.

வெண்ணிலவின் பால் கதிர்கள் குடிசையெங்கும் பரவி தென்றலோடு உறவாடிய போதும், சாரங்கனின் முகத்தில் கவலை தன் கிளையைப் பரப்பிக்கொண்டிருந்தது. தூரத்தில் எங்கோ குதிரைகளின் குளம்பொலி அவர் காதுகளுக்கு எட்ட, உடம்பெங்கும் தீ ஊடுருவுவதைப் போன்று திடுக்கிட்டார். தன் சீடனைக் கேள்விக்குறியோடு நோக்கினார். அவன் வரப் போகிறவர்களை எதிர்பார்த்து வாசலின் வழியே நோக்கிக்கொண்டிருந்தான்.

அவன் எதிர்பார்த்தபடியே சில வினாடிகளில் சுமார் பத்து குதிரைகளில் வீரர்கள் வந்தனர். அவர்களின் பின்னே சிறிய ரதம் ஒன்றும் குடிசையை நோக்கி வந்தது. குடிசையை அடைந்ததும், மற்ற வீரர்கள் வாசலிலேயே நிற்க, ஒருவன் மட்டும் குடிசையினுள் நுழைந்தான். வந்தவன் வைத்தியரை வணங்கி, தன் நாடான நாகவனத்தின் முத்திரையைக் காட்டினான்.

தான், 'மன்னர் மார்த்தாண்டனின் நம்பிக்கைக்கு உரியவன்' என்று அறிமுகப்படுத்திய அடுத்த வினாடியே, "தங்களை அழைத்து வருமாறு மன்னரின் கட்டளை. உங்களுக்கு முன்னமே தகவலும் கொடுத்திருக்கிறோம். செல்லலாமா?" என்றான்.

வைத்தியரின் நிலையையோ அவரின் பதிலையோ பற்றி அவன் கவலைப்படவில்லை என்று அவன் பேச்சிலேயே உணர்ந்த வைத்தியர் அவர்களுடன் செல்லத் தீர்மானித்தார். எதிர்த்துப் பேசினால் தலையை கொய்துவிடுவார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள அதிக நேரம் எடுத்துக்கொள்ளாத வைத்தியர், தான் அரைத்து வைத்திருந்த மூலிகையையும் தன் சீடனையும் அழைத்துக்கொண்டு வெளியே வந்தார்.

சில்லென்ற குளிர் காற்று அவர்களின் உடலைத் தழுவியபோதும் அதை ரசிக்காமல் வாசலில் நின்றிருந்த வீரர்களின் அருகில் சென்றனர். வீரர்கள் வைத்தியரை வணங்கி தாங்கள் கொண்டு வந்திருந்த ரதத்தினுள் ஏறி அமருமாறு பணித்தனர். அவரும் விதியின் போக்கிலேயே போகட்டும் என்ற மனதுடன் ஏறி அமர்ந்தார். அவரது சீடனும் வைத்தியரின் அருகில் அமர்ந்துகொண்டான்.

எல்லோரும் புறப்பட்டனர்.

காட்டினுள் காட்டுவாசிகளால் வைத்தியருக்கு எந்த வகையிலும் ஆபத்து நேரக்கூடாது என்ற கட்டளை மன்னர் மார்த்தாண்டனிடமிருந்து வந்திருந்ததால், காட்டினைச் சுற்றி வைத்தியரை அழைத்துச் சென்றனர். முன்னே இரண்டு வீரர்கள் கையில் தீப்பந்தத்தை ஏந்தியபடி வழிகாட்ட ரதத்தின் பின்னே இரண்டு வீரர்கள் வைத்தியருக்குக் காவலாக அவர்களும் தீப்பந்தத்தை ஏந்தியபடி வந்தனர்.

குதிரையின் வேகத்தைக் கூட்டவில்லை. அதனால், குதிரை மிதமான வேகத்தில் அவர்களை அழைத்துச் சென்றது. சீடனின் முகம் மிகவும் இறுக்கமாக இருந்தது. தீப்பந்தத்தின் ஒளியில் பொன்னிறமாகத் தெரியும் வீரர்களை நோக்கியபடி இருந்தான் அவன்.

வைத்தியர் நீண்ட நெடு சிந்தனைக்குள் இறங்கினார். சில வாரங்களுக்கு முன் நடந்த சம்பவம் அவர் நினைவில் மீண்டும் முளைத்தது.

நாகவன வீரனொருவன் திடீரென்று அவர் வீட்டினுள் வந்தான். யார்? என்று கேட்பதற்குள் கையிலிருந்த ஓலையை அவரிடம் நீட்டினான்.

## காதல் கூட்டணி

ராம்குமார் ஜெயராமன்



உன் வீட்டு ஜன்னல் என்னுடன் கூட்டணி
உன்னை நான் பார்க....
உன் வீட்டு ஜன்னல் கதவு உன்னுடன் கூட்டணி
என்னை நீ மறுக்க...
உன் வீட்டு ஜன்னல் கதவு கூட்டணி மாறியது
காதல் ஆட்சி அமைக்க....
எதிர்கட்சியான உனக்கு தான் என்
அமைச்சரவையில்
முதலமைச்சர் பதவி...

குழப்பத்தோடு அதை வாங்கிப் படித்த வைத்தியரின் முகத்தில் இடி இறங்கியது.

ஒருவருக்கு உங்கள் உதவி தேவைப்படுகிறது. அடுத்த வாரம் எங்கள் வீரர்களை அனுப்புகிறேன். நீங்கள் வரவும். மீறினால் உயிர் பறிக்கப்படும்.

நாகவன அரசர் மார்த்தாண்டன்

என்று எழுதியிருந்தது அவ்வோலையில்.

ரதம், பள்ளத்தினுள் இறங்கி ஏறி லேசாகக் குலுங்கியபோது வைத்தியரின் நினைவுகள், இறந்தகாலத்தை விடுத்து நிகழ்காலத்தில் நுழைந்தன.

குதிரைகளும் ரதமும் ஓரிடத்தில் நின்றன. 'ஏன் நின்று விட்டது?' என்று எண்ணியபடி பட்டுத் திரையை விலக்கிப் பார்த்தார். ஓர் அருவியைத் தான் அடைந்திருக்கிறோம் என்பது புரிந்தது அவருக்கு. வானிலிருந்து தொப்பென்று ஆகாய கங்கை மேகத்தைக் கிழித்துக் குதிப்பது போன்று குதித்த நீர் தரையில் காட்டாறாய்ப் பெருகி பாறைகளை

உரசியபடி சென்றுகொண்டிருந்தது. அதில் சில படகுகள் கரையில் கட்டப்பட்டு நதியோரம் தவழ்ந்தபடி இருந்தன.

"வாருங்கள் அய்யா! இப்பொழுது நாம் படகில் செல்லவேண்டும்" என்று ஒருவன் பணிவான குரலில் வைத்தியரை அழைத்தான்.

பெருமூச்சை விட்டெறிந்தபடி ஒரு படகில் வைத்தியரும் சீடனும் ஏறினர். வீரர்களில் ஒருவன் அவர்களின் படகை நதியினில் செலுத்தினான். மற்றொரு வீரன் தீப்பந்தத்தைப் பிடித்துக்கொண்டு அவர்களுக்குக் காவல் புரிந்தான். காவல் புரிந்தவனின் கண்கள் சீடனின் மேல் ஓடியது. அவனது இறுகிப்போன முகமும் மெலிந்த தேகமும் அதில் ஒளிந்திருக்கும் வலுவும் சீடனை வித்தியாசப்படுத்திக் காட்டியது.

சீடன் தன் கூரிய விழிகளைத் தன்னைக் கண்காணித்துக்கொண்டிருந்தவனின் மேல் நிலைநிறுத்தினான். பிறகு, 'நாம் எங்கே சென்றுகொண்டிருக்கிறோம்?' என்று ஒரு முறை தனக்குள்ளாகவே கூறிக்கொண்டிருந்த சமயத்தில் படகு நின்றது. சீடனும் குருவும் சுற்றும் முற்றும் பார்த்தனர்.

பெரிய மலைகள் இரண்டு. அதைச் சுற்றி ஓடிக்கொண்டிருக்கும் நதியின் பாதை ஐந்தாகப் பிரிந்திருந்தது. சிறு சிறு அலைகள் லேசாக எழும்பியபடி இருந்தன. அந்த ஐந்து வழி நதியின் பாதையின் கடைசி வழியில் படகு புறப்பட்டது. பட்சிகளின் சந்தங்களும் பூச்சியினங்களின் பேரிரைச்சலும் அவர்களின் உடலை நடுங்கச் செய்தன. அவ்வப்போது நதியின் ஓரத்தில் ஏற்பட்ட சலசலப்பும் அவர்கள் மனதைத் திடுக்கிடச் செய்தது. சிறிது நேரத்தில் படகு கரையை அடைந்தது.

கரையின் ஓரத்தில் நாகவன ஆட்கள் தீப்பந்தத்தைப் பிடித்து அதன் ஒளியில் தங்களை நனையவைத்து நாங்கள் இங்கு தான் இருக்கிறோம் என்று சொல்லாமல் தீப்பந்தத்தை இருமுறை அசைத்தனர். படகு நின்றதும் கரையில் துள்ளிக் குதித்தான் சீடன். சிறிய பல்லக்கு ஒன்று வைத்தியருக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் ஏறி அமர்ந்துகொண்டார் வைத்தியர். சீடன், வீரர்களுடன் வேடிக்கை பார்த்தபடி நடந்து வந்தான். அலட்சிய விழிகளால் அசட்டைத்தனமாக கண்டுகொண்டே வந்த அவனை யாரும் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை.

எட்டு நாழிகைகள் இப்படியே கடந்து நாகவன சிறைச்சாலையின் முகப்பை அடைந்தனர். கரும் பாறைகளால் மதிற் சுவர் அமைக்கப்பட்டு நூற்றுக்கணக்கான வீரர்கள் சுவரின் மேல் நின்று காவல் புரிய, ஆங்காங்கே தீப்பந்தங்கள் ஏற்றப்பட்டிருந்தன. இவர்களைக் கண்டதும் நெடு உயர கதவு ஒன்று அசுரனின் வாய் போல் பிளந்து இவர்களை உள்ளே அழைத்தது. உள்ளே நுழைந்ததும், பல்லக்கிலிருந்த வைத்தியர் கீழிறங்கினார். அவர்கள் சிறைச்சாலையின் உள்ளே அழைத்துச் செல்லப்பட்டனர். அவர்களை அழைத்துச் சென்ற பாதைகளிலெல்லாம் சிறை அறைகளும், அதில் கைதிகளும் நிரம்பி இருந்தனர். அவர்களின் முகத்தில் சோகமும் வெறுப்பும் ஒரு சேர கலந்து இவர்களை நோக்கினர். அவர்களை கண்டுகொள்ளாமல் வைத்தியர் முன்னே செல்ல, சீடனும் கைதிகளைப் பார்த்தபடி பின்னே வந்தான்.

சிறைச்சாலையின் பாதாள அறைக்கு அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர். அதில் மூன்று அறைகள் மட்டுமே இருந்தன. இரண்டு அறைகள் வெறுமனே இருந்தன. ஒரு அறையில் ஒருவர் சுயநினைவின்றி படுத்துக் கிடந்தார். தான் சிகிச்சை அளிக்கப்போவது இவராகத் தான் இருக்கும் என்றெண்ணி அவர் முகத்தையே உற்றுநோக்கினார் வைத்தியர்.

"வாருங்கள் வைத்தியரே!" என்ற சிம்மக்குரலைக் கேட்டு வைத்தியர் அவ்வறையின் ஒரு மூலையில் நோட்டமிட்டார்.

மார்த்தாண்ட சக்ரவர்த்தி நின்று வைத்தியரைப் பார்த்து புன்முறுவலை வழங்கிக்கொண்டிருந்தார்.

"அரசே!" என்று தன்னை அறியாமல் மார்த்தாண்டனைப் பார்த்து நா தழு தழுக்கும் குரலில் கூறினார் வைத்தியர்.

"உங்களை வற்புறுத்தி அழைத்தமைக்கு என்னை

## (MONEY)தம்

**காவியன்**

"அறம் செய்ய விரும்புகிறார்கள்"
80 G DEDUCTION க்காக மட்டும்..

"யாதும் ஊரே யாவரும் கேளிர்"
TWENTY 20 இல் மட்டும்..

வள்ளாரின் "வாடிய பயிர்"
இன்று FIGURE ஆகி விட்டது..

FIXED DEPOSIT
செய்யும் பொழுது மட்டுமே,
தாத்தா பாட்டியின்
ஞாபகம் வருகிறது..

போதும் போதும்
பட்டம் வென்றோம்..
பல்கலை கற்றோம்..
பார் வியக்கும் புகழும் பெற்றோம்..
ஆசை வென்றோம்..
அகிலம் வென்றோம்..

மனிதம் மட்டும்
ஏனோ தோற்றே போனோம் ?

மன்னியுங்கள். இதோ படுத்திருக்கிறாரே இவர் சுயநினைவின்றி சில காலம் கிடக்கிறார். உங்கள் சிகிச்சை இவரைக் குணப்படுத்தும் என்று நம்புகிறேன்"

"யார் இவர்?" என்றார் வைத்தியர்.

"அது உங்களுக்குத் தேவையில்லாதது. நீங்கள் சிகிச்சை மட்டும் செய்யுங்கள்" என்றார் மார்த்தாண்டன் சற்றே கடுமையான குரலில்.

வைத்தியர் மறுபதில் கூறாமல் படுத்திருந்தவரைப் பரிசோதித்தார். நாடித் துடிப்பைக் கவனித்தார். நெஞ்சினில் பெரிய காயம் ஏற்பட்டிருப்பதையும் அவருடைய முகத்தில் ராஜகளை உள்ளதையும் கவனித்தார். வைத்தியர் பரிசோதித்துக்கொண்டிருந்த நேரம் மார்த்தாண்டனின் கொடிய விழிகள் சீடனை ஆராய்ந்துகொண்டிருந்தது. அவரின் விழிகளை நோக்க பிரியப்படாமலிருந்த சீடன் என்ன செய்வதென்று விழித்தான்.

வைத்தியர் சீடனைப் பார்த்து சில பச்சிலைகளை அரைத்துத் தருமாறு கேட்டுக்கொண்டார். உடனே சீடனும் தான் கொண்டு வந்த பொருட்களைச் சரிபார்த்து பச்சிலைகளை அரைக்கத் துவங்கினான். அவன் அரைத்த விதம் ஒரு வைத்தியருக்கு உரித்தான சாயலில் இருந்ததால் மார்த்தாண்டனின் சந்தேகப்பார்வை திசை திரும்பியது. சிறிது நேரத்தில் அரைத்த பச்சிலையை வைத்தியரிடம் கொடுத்தான். அவர் காயத்திற்கு மருந்திட்டு மன்னரை நோக்கினார்.

"அரசே! இவர் சுய நினைவுக்கு வர சில காலம் பிடிக்கும். அது வரை எனது சீடன் இங்கேயே இருந்து இவரைக் கவனித்துக்கொள்ளட்டும். அவ்வப்போது நானும் வெளியிலிருந்து மருந்துகளைக் கொண்டுவருகிறேன். உங்களின் ஆசைப்படியே விரைவில் இவர் எழுந்து நடமாடுவார்" என்றார்.

மன்னரும் சிறு யோசனைக்குப் பின் வைத்தியர் கூறியதை ஒப்புக்கொண்டார்.

"ஆகட்டும் வைத்தியரே. அவ்வாறே செய்வோம்" என்று கூறி பணியாளை அழைத்தார்.

பணியாளன் வந்ததும் வைத்தியரை அழைத்துச் செல்லுமாறு சமிக்ஞை கொடுத்தார். வைத்தியர் செல்லும் முன் சில சிகிச்சை குறிப்புகளை தன் சீடனிடம் சொல்லி அவ்வாறே தினமும் பணிவிடை செய்யவேண்டும் என்று கூறிவிட்டு அங்கிருந்து அகன்றார்.

மார்த்தாண்டன், துளைக்கும் பார்வையை சீடனின் மேல் வீசி, "வைத்தியர் சொன்னது நினைவிருக்கிறதா?" என்று மிரட்டும் குரலில் கேட்டார்.

"இருக்கிறது அரசே" என்று தலை தாழ்த்தினான் சீடன்.

மன்னர் அங்கிருந்து புறப்பட்டார். சீடன் அவ்வறையிலேயே பூட்டப்பட்டான். பூட்டப்பட்ட கதவின் வழியே விஷமப் புன்னகை வீசியபடி, 'தான் எடுத்த வைத்த முதல் அடி வெற்றி' என்று தனக்குள்ளே பெருமிதம் கொண்டான் வைத்தியரின் சீடனான, பூபதி.

இத்துணை காலமும் ராஜகுருவின் பராமரிப்பில் கடும் போர் பயிற்சிகளை மேற்கொண்டான் பூபதி. வாள் வீசுதல், எதிரிகளிடமிருந்து தற்காத்துக்கொள்ளுதல், தந்திரமாய் நடந்துகொள்ளுதல், போன்ற பல பயிற்சிகளை அவரின் மேற்பார்வையில் மேற்கொண்டான். முதலில் கடினமாக உணர்ந்தாலும் பிறகு சாமாளித்துக்கொண்டு ஒரு வீரனாக உருவெடுத்தான் பூபதி. அவனது உடல் வலுப்பெற்று

## நாம் ஏன் நம்ப வேண்டும்..?

நற்புவி மகேந்திரன்

நுகர்வுக்காக மட்டுமே
நகர்ந்து திரியும்
உயிர்களை
மனிதர் என நம்பச் சொன்னால்
நாம் ஏன் நம்ப வேண்டும்?

வர்த்தகம் நடத்துமோர்
வணிகச் சந்தையை
வளமிகு உலகென நம்பச் சொன்னால்
நாம் ஏன் நம்ப வேண்டும்..?

முதலாளியிடம்
கூலி நிமித்தம்
கேட்கும் கோரிக்கைகளை
முக்தியைத் தேடிடும்
பக்தி வேண்டுதல் என நம்பச் சொன்னால்
நாம் ஏன் நம்ப வேண்டும்..?

முதலீடு செய்துவிட்டு
பதிலீடு பார்ப்பதற்கு
முழு வேகமாய் முயலும்
போட்டியாளர்களை
மக்கட் சேவையாளர் என நம்பச் சொன்னால்
நாம் ஏன் நம்ப வேண்டும்..?

பொருள்களின் மீதும்
புற உடல் மீதும்
ஈர்த்திழுக்க
போதிக்கும் கூச்சல்களை
புனிதக் கலை வெளிப்பாடு என நம்பச்
சொன்னால்
நாம் ஏன் நம்ப வேண்டும்..?

வெறிகளைத் தீர்த்திட
குறி வைத்துத் தயாரிக்கும்
பொறிகளைக் காட்டி
விஞ்ஞான வெற்றி என நம்பச் சொன்னால்
நாம் ஏன் நம்ப வேண்டும்..!

*சுடர்விடத் தொடங்கியது.*

*அயோத்தியவன அரசர் போரில் பயங்கர காயமுற்றிருப்பதை ஒற்றர்கள் மூலம் தெரிந்துகொண்ட ராஜகுரு, மார்த்தாண்டன் சிறந்த வைத்தியனைத் தேடி வருவதையும் தெரிந்துகொண்டார். ஆதலால் முக்கிய வைத்தியர்களைக் கண்காணிக்க ஒற்றர்படையை ஏவி விட்டார். சாரங்கனைச் சந்தித்த நாகவன வீரனைப் பற்றி ராஜகுருவிற்கு ஒற்றர்கள் மூலம் தகவல் கிடைத்தது. தக்க தருணத்தை எதிர்பாத்திருந்த ராஜகுரு, பூபதியை வைத்தியர் சாரங்கனிடம் அழைத்து சென்றார். தங்கள் நாட்டுக்கு மார்த்தாண்டனால் ஏற்படவிருக்கும் ஆபத்தை விளக்கிக்கூறியும்,அதனால், பூபதியை சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு, அவன் நாகவனத்திற்குள் ஓர் ஒற்றனாக தங்கு தடையின்றி நுழைய உதவி செய்யுமாறும் கேட்டுக்கொண்டார். முதலில் வைத்தியர் இதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. 'சித்தவைத்தியத்தில் களவு இருக்கக்கூடாது' என்று மறுத்தார். ஆனால், பூபதி சில காலம் வைத்தியத் தொழில் கற்றுக்கொண்டான் என்று தெரிந்த பின்பு அரைமனதோடு ஒப்புக்கொண்டார்.*

இதையெல்லாம் எண்ணிப் பார்த்துக்கொண்டிருந்த பூபதி விஷமப் புன்னகையை உதிர்த்துக்கொண்டே இருந்தான்.



## மழை

grapes மகேந்திரன்

ஒரு மழைநாளில்

குடை பிடித்தபடி நீ

லேசாக நனைந்தபடி நான்.

கூப்பிட்டாலும் போகக்கூடாது என

உறுதி எடுத்துக்கொள்கிறது மனது

உன்னை நோக்கியே நடக்கின்றன

கால்கள்..

நடுசாம அமைதி மனதினை நடுங்கச் செய்யும் நேரத்தில், ரவிவர்மன் நாகவனத்தை அடைந்தான். நாகவன வாயில் மூடப்பட்டிருக்கும் என்றும் கட்டுக்கடங்கா காவல் அமைக்கப்பட்டிருக்கும் என்றும் முன்னமே தெரிந்திருந்த அவன், வடக்கு திசையை அடைந்து நாகவனத்தில் நுழைய முற்பட்டுக்கொண்டிருந்தான். ஒரு நாள் பசியும் பட்டினியுமாக காட்டிற்குள் அலைந்து திரிந்து ஒரு வழியாக நாகவனத்தை அடைந்த ரவிவர்மனுக்கு முன் தினம் நடந்தவையெல்லாம் கனவாகத் தோன்றின. தன் குதிரையை அம்பு எய்திக் கொன்றவன் யாரென்ற சிந்தனையின் விடை தான் கிடைத்தபாடில்லை அவனுக்கு.

## இச்சைக்கொண்ட மானிடமே

நிலாசூரியன்

நித்தம் எமக்கு போராட்டம்
நீலக்கடலோ நிற மாற்றம்
ரத்தம் சிந்தும் வாழ்வோட்டம்
செங்கடலாகும் பரிமாற்றம்...

உண்டுபிழைக்க உயிர்வாழ
உப்பு நீரே ஆதாரம்
அதற்கும் அனுமதி தாராமல்
தடுக்கும் சிங்கள பரிவாரம்...

தமிழனின் அனுமதியில்லாமல்
கச்சத்தீவு தானமடா
பிச்சையிட்டக் கைகளையே
உடைப்பதுயென்ன நியாயமடா...

உப்புக்கண்ணீர் கடலாக
சுரக்குது எங்கள் கண்களிலே
அதுதான் பாலோ என்றெண்ணி
பருகுது பசியில் குழந்தைகளே...

எத்தனை ஆட்சிகள் வந்தாலும்
எங்களுக்கில்லை வாழ்வுரிமை
எத்தனைத் தலைவர்கள் வந்தாலும்
எங்களுக்கில்லைக் கடல் தலைமை...

தினம் தினம் செத்துப் பிழைப்பதற்கு
வேதனைத் தீயில் எரிவதற்கு
யார்தான்யிட்ட கட்டளையோ
எமக்கான வாழ்வு இங்கில்லையோ...

கட்டுமரங்கள் கைகளடா
கடலே எங்கள் கடவுளடா
வலையே எங்கள் உலகமடா
வாழ்க்கைத் தந்து உதவுங்கடா...

பிச்சையிட்டக் கைகளுமே
பிச்சைக்காக நீள்கிறது
இச்சைக்கொண்ட மானிடமே
இன்றே
எமக்கொரு முடிவை எடு...!!!

மரக்கூட்டத்தின் நடுவே நடந்து வந்த அவனை யாரோ பின்தொடருவது போன்ற பிரம்மையால் அடிக்கடி திரும்பிப் பார்த்து

உறுதிப்படுத்திக்கொண்டான். நீண்டு உயர்ந்த மதில் சுவர் ஒன்று அவனைத் தடுத்து நிறுத்தியது. தன்னை யாரும் கண்காணிக்கிறார்களா என்று ஒரு முறை பார்த்துக்கொண்டு மடியில் கட்டியிருந்த ஒரு கயிற்றில் ஒரு சுருக்கு முடிச்சு போட்டு வீசி எறிந்தான். முதலில் அது எங்கும் சிக்கவில்லை. ஆனாலும் அவன் தளரவில்லை. மீண்டும் மீண்டும் முயற்சி செய்த அவனுக்கு அதிர்ஷ்டம் கிட்டியது. சுவற்றின் மேல் கூரிய கல்லில் முடிச்சு சிக்கியது. தன்னைத் தாங்கும் சக்தி கயிற்றுக்கு உள்ளதா என்று கையிற்றை ஒரு முறை இழுத்துப் பார்த்து நம்பிக்கை வந்தவனாய் சுவரின் மேல் ஏறத் துவங்கினான்.

கால் பாகம் ஏறிய ரவிவர்மன் சுற்றும் முற்றும் நோட்டமிட்டான். ஆனால், இருள், ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்திருந்த நாகவன வீரர்களை அவன் கண்களுக்குப் புலப்படாமல் செய்துவிட்டது. ஒருவனின் கையில் வில்லும் அம்புகளும், இன்னொருவனின் கையில் கூரிய வாளும் இருந்தன. வில்லைத் தாங்கியிருந்த வீரன் ரவிவர்மனை நோக்கி குறிபார்த்த சமயம் சடாரென்று இரு கூரிய கொம்புகள் அவர்களின் உடலில் நுழைந்து அலறக் கூட நேரம் கொடுக்காமல் அவர்களின் உயிரைப் பறித்தது. கீழே விழுந்த உயிரற்ற உடல்கள் புதரின் மறைவில் மறைக்கப்பட்டன.

ஏதோ சலசலப்பு எழுகின்றதே என்று வேக வேகமாக சுவரின் மேல் ஏறி மறு பக்கத்தில் குதித்தான், ரவிவர்மன். அவனது கால் ஒடிந்து விட்டதைப் போன்று வலி பிடுங்கியது. வியர்வைத் துளிகள் முத்துக்களாக முகமெங்கும் பரவ ஐந்து நிமிஷங்கள் அங்கேயே கிடந்தான். பசி வயிற்றைத் தின்ன, எழுந்து நடக்கத் துவங்கினான். வீதியின் ஓரம் இருளிலேயே நடந்தான். இரவு காவலர்கள் வீதிகளில் வலம் வரும் அரவம் கேட்டால் பதுங்கிக்கொண்டு முன்னேற அவனுக்கு நாழிகைகள் பிடித்தன. இவ்வாறு மறைந்து மறைந்து இரண்டு வீதிகளைக் கடந்து விட்டான். 'இன்றிரவு தங்குவதற்கு ஓரிடம் கிடைத்தால் நன்றாக இருக்குமே' என்று மனதினுள் ஏங்கினான்.

நிலவு கூட மேகத்தினுள் மறைந்திருந்த நேரம். கும்மிருட்டு வீதியெங்கும் பரவியிருக்க மெல்ல நடந்த அவனை இரவுக் காவலன் ஒருவன் பார்த்துவிட்டான். உடனே அவனை நோக்கிக் குதிரையை விரட்டினான். இதை உணர்ந்துகொண்ட ரவிவர்மன், தான் ஒதுங்கியிருந்த ஒரு சிறுவீட்டினுள் நுழைந்துகொண்டான். அவன் அதிர்ஷ்டம் அந்நேரத்தில் வீட்டின் கதவு தாளிடப்படாமல் கிடந்தது தான். உள்ளே சென்று பதுங்கிக் கொண்டான்.

நாகவன வீரன் அவ்வீட்டின் முன் குதிரையை நிறுத்தினான். வீட்டுத் திண்ணையில் ஒரு பெண்மணி படுத்திருந்தார்.

## பெற்றோரே ஒருமுறை வாரீர்

கே இனியவன்

வெளி நாட்டு மணமகன்
வெளிநாட்டில் தான் திருமணம்
சுற்றத்தார் மத்தியில் புகழாரம்
திருமணம் சிறப்பாய் நடைபெற்றது
வாழ்க்கையும் வெளிநாடு பறந்தது ..!!!

சுற்றத்தாரின் பேச்சில்லை
உற்ற நண்பியின் ஆதரவுமில்லை
ஆறுதல் வார்த்தை சொல்ல
ஆனந்தமாய் வார்த்தை சொல்ல
அருகில் யாரும் இல்லை ...!!!

நான்கு சுவருக்குள் இன்பம்
அதே சுவருக்குள் துன்பம்
மாறி மாறி வாழும் சுவர்
வாழ்க்கை தான் வெளிநாட்டு
வாழ்க்கை வெறுத்தே போகிறது ..!!!

உற்ரத்தாரின் கொண்டாட்டம் இல்லை
சித்திமகளின் காதுக்குத்து இல்லை
மாமாவின் மகளின் பூப்புனிதம் இல்லை
கூட்டத்தோடு கோயில் செல்லும்
சுகமில்லை
வாழ்த்துக்களுடன் கழிந்தன இவை ..!!!

ஊரில் நல்ல வரன் வந்தும்
என் பிள்ளையை வெளிநாட்டில் தான்
வாழவைப்பேன் என்று பெருமை போடும்
பெற்றோரே ஒருமுறை வாரீர்
மகளின் இயந்திர வாழ்க்கையை பாரீர் ..!!!

என்று தணியும் இந்த வெளிநாட்டு
மோகம் எப்போது நம்புவர் -இவர்கள்
உள்ளூர் உற்பத்தி நன்று என்று
கூடி வாழ்ந்த சமூகம் இப்போ
சிதறிக்கிடக்கும் அவலநிலை பாரீர் ..!!!

"யார் படுத்துக்கொண்டிருப்பது? எழுந்திரு!" என்றான் அதிகாரக் குரலோடு.

அந்தப் பெண்மணி முனகியபடியே எழும்பினார். இந்நேரத்தில் வீரன் வந்திருப்பது அவருக்கு அதிர்ச்சியையும் குழப்பத்தையும் கொடுத்தது.

"இங்கே ஒருவன் பதுங்கி வந்தானே, எங்கே அவன்?" என்றான்.

"அப்படி யாரும் வரவில்லையே" என்றார் அவர் குழப்பத்துடன்

"இல்லை நான் கண்டேனே" என்றான் அவன் மீண்டும்.

"நான் தான் கெட்டுவிட்ட பழைய உணவை இங்கு கொட்ட வந்தேன். அதை பார்த்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்" என்றார் அவர்.

"பழைய உணவா?" என்று கேட்டபடியே கீழே நோக்கினான் வீரன். பெண்மணி சொன்னபடி அங்கே உணவு கொட்டப்பட்டிருந்தது. தான் தான் தவறாக எண்ணிவிட்டோமா? என்று சிந்தித்தபடி அவரிடம் கூட சொல்லாமல் குதிரையில் ஏறிக் கிளம்பினான் அவன்.

அவன் சென்ற உடன், உள்ளே சென்ற பெண்மணி ஒரு விளக்கை ஏற்றினார். விளக்கு சரியாக எரிகிறதா என்று நோக்கியபடியே, "ஒளிந்திருந்தது போதும். உன்னைத் தேடி வந்த ஆபத்து சென்றுவிட்டது" என்றார்.

இருளில் மறைந்திருந்த ரவிவர்மன் தீபத்தின் மங்கிய ஒளியை நோக்கி வந்தான்.



*சாம்ராட் சம்யுக்தன் இரண்டாம் பாகம் நிறைவுற்றது*

**விரைவில் மூன்றாம் பாகம் ஆரம்பம்**



# கவிதைக்குறள் திருக்குறள் தெளிவுரை...

செந்தமிழ்தாசன்

**பாயிரம் - கடவுள் வாழ்த்து**

குறள் 9. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

புலன் ஐந்தாம்
அதன் வழியாகும்
செயல்தன்
வழியாய் கொள்ளும்
கருவியாம் மனது...

தன்வயத்தாகி தூய்உடம்பாகி
இயற்உணர்வினனாகி
முற்றுமுணர்ந்தவனாகி
பாசத்திற்கு இணங்கினானாகி
பேரருள் கொண்டும்
முடிவிலா ஆற்றல் கொண்டும்
எல்லையிலா இன்பமாகித்
திகழும் இறைவன்....

இவ்வெண்குணத்தான்
தாள்பற்றி
வணங்காச் சிரம் கொண்டோர்
கண்ணிருந்தும் பார்வையின்றி
நாவிருந்தும் பேச்சின்றி, சுவையின்றி
செவியிருக்க கேட்பதன்றி
நாசியிருக்க உணர்வின்றி
உடலிருக்க உயிரின்றியும்
தன்குணம் கொள்ளுமே குற்றம்....

குறள்.10 பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

புனையில் நீந்திக்
களித்திருக்க வேண்டுமே
பயிற்சி - ஆதுபோல்
இறைவன் அடிசேர
வேண்டுமாம் பக்தி...

பக்தியெனும் குளத்தில்
நீந்திக் கரைசேர்ந்தார்
என்பார்க்கு பிறவிப்
பெருங்கடல் கடத்தல் தூசு
மற்றோர் கரைகாணாது
வீணாய் அழிவரே....

முதல் அதிகாரம் நிறைவு.

# வாழையடி வாழை

காவியன்



ஊருக்குள்ள பெரிய பண்ணை,
வீட்டுக்குள்ள அடங்கி நின்னு,
இள ஆட்டு சதைக்கறி
இளையவளுக்கு புடிக்குமுன்னு
கேட்காம எடுத்து வரும்
அப்பங்காரனையும்…

○ ○ ○

பல்லு கூட விளக்காம
துயில் முறித்த கையோடு,
நாட்டு கோழி ரசத்தோடு,
ஊட்டி விட்ட அம்மாவையும்
மறந்து விட்டு…

○ ○ ○

ஆட்டு குட்டி, மாட்டு குட்டி
அத்தனையும் விட்டுப்புட்டு
என்னை நம்பி
ஓடி வந்த,
உன்ன எப்படி கண்ணு
பார்த்துப்பேன் !
கண்ணுக்குள்ள வைச்சாலும்
பத்தாது ரத்தினமே !!

○ ○ ○

தலையணை நனைக்கும்
உன் கண்ணீரை- எனக்கு
தெரியாம மறைச்சுப்புட்டா,
உன் எண்ணம்
உன் அப்பன் தான்னு- எனக்கு
தெரியாம போயிடுமா ?

புள்ள ஒன்னு பெத்துப்புட்டா,
மொத்த கணக்கு தீருமுன்னு
மன கணக்கு
போட்டு வைச்சேன்.
என் கணக்கு தப்பலையே !
ஐயிரண்டு மாசத்துல,
ராசாத்தி பொறந்துடுச்சே !!

○ ○ ○

அப்பனுக்கு சொல்லலையான்னு-
நீ
கேட்காம கேட்கையிலே ,
உன் அப்பங்காரன் மீசை மட்டும்
கண்ணுக்குள்ள நிக்குதடி…
உன் மாமங்காரன் விட்ட அடி
தலும்பின்னும் மறையலையே…
உன் ஆத்தாக்காரி விட்ட சாபம்
நெஞ்சம் இன்னும் மறக்கலையே…

○ ○ ○

தந்தி கிடைக்கும் முன்னே
வந்து சேர்ந்தான்
அவன் அப்பங்காரன்…
“வாங்க மாமா” ன்னு
சொல்லயில,
மதிக்காம உள்ள போனான்…

○ ○ ○

நீ உருப்படாம தான்
போவேன்னு
திட்டிய மாமங்காரன்
அடங்கிய காளைய போல்
தூக்கி முத்தமிட்டான்…

○ ○ ○

இம்புட்டு அழகான்னு
உச்சி முகர்ந்து பார்த்துப்புட்டு,
அப்படியே அவ ஆத்தா மாரீன்னு
புகழாரம் சூட்டிப்புட்டு,
எவன் தூக்கிட்டு போவானேன்னு-
கிழவி நையாண்டி பேசுகையில்,
**நானும் ஒரு அப்பனாகி**
**பயம் வந்து ஒட்டிடுச்சே !!!**

○ ○ ○

# நிழலாகிய நான்!!!

தாமரைச்செல்வன்




தனிமை இரவு!!!
மின்வெட்டு!!!
செவியுணரா ஓலமிடும் சத்தம்!!!
இருட்டறையில் கருவறைக்
குழப்பம்??!!!

பிரசவித்து வெளிப்பட்டேன்
பால்நிலா பல்லிளித்து பரிகசித்தது
படிவழி ஏறிப் பார்த்தேன்
கண்கூச்சமற்ற நிலவொளி!!!
உடல் கூசியது

ஓலமிடும் சத்தம் ஓய்யார
சிரிப்பாய் இப்போது!
பயந்து பின்வாங்கினேன்
வாமன அவதாரம் எடுத்தது
என் நிழல்!!!

மயான அமைதி
நிழல் நிசப்தம் கலைத்தது . . . . . . . .

உன்னுடன் சில நிமிடங்கள்??!!
சில கேள்விகள்??!! முதிர்த்து
தெளித்தது வார்த்தைகளை
மௌனியாய் நான் . . . . .
உன்னுடன் இறுதிவரை வருபவர்
யார்?!!!
காடுவரை பிள்ளை
கடைசிவரை???
தயங்கினேன் . . . .
நான்தான் என்றது நிழல்
உண்மை!! மீண்டும் மௌனித்தேன்
எங்கே ஓடிக்கொண்டிருக்கிறாய்???
எதை நோக்கி
ஓடிக்கொண்டிருக்கிறாய்???
உன் அவசர பயணத்தின் நோக்கம்
யாது???
நாம் காலார நடை பயின்றது
எப்போது???
இறுதியாய் எனை உற்றுக்
கவனித்தது எப்போது???
மாணவன் உள்ளுணர்வறிந்த
ஆசானாய்
கேள்விகளை நிறுத்தி விளக்கம்
அளித்தது

நோக்கமற்ற உன் பயணத்தில்
அடிபட்டு நான் கிழிந்த நாட்கள்
சொல்கிறேன் கேள்!!!

உன் பின்னால் கத்திக் கொண்டு
குத்துயிரும் கொலையுயிருமாய்
அலைந்த நாட்கள்
என்சொல்வேன்!!

உன்இருகரம் பற்றி இழுத்து
ஏங்கிப்போன நாட்கள்
என்சொல்வேன்!!

உன்முன் வந்து மயக்கியும்
வாகனசக்கரத்தில் சிக்கி மடிந்தும்
மண்றாடிய நாட்கள் என்
சொல்வேன்!!

தொலைக்காட்சிப் பெட்டியில்
தொலைந்து நீ போகையில்
தோள் உரசி நான் அழுத
அவல நாட்கள் என் சொல்வேன்!!

உறக்கத்தின் உச்சத்தில் நீ
புரண்டு புரண்டு படுத்திருக்க
நான் துவண்டு துவண்டு
துடித்தது என்சொல்வேன்

குளியலறையிலேனும் உன்னுடன்
குலாவியிருக்க
ஆசைப்பட்டிருந்தேன்
குளியலுனக்கோர் குலவழக்கமாய்
போனதென் சொல்வேன்!!

இறுதியில் ஒன்று
தெளிந்தேன் என்றேன்!!!
குறுநகையில் கொன்று
தொடர்ந்தது!!

என்றேனும் கண்ணாடி முன்
நீ ரசித்து பார்க்கும் போதுதான்
நிழலாகிய நான் உன்
உடலணிந்து
உயிர்பித்திருக்கிறேன்
என்று இன்பமுரைத்து
வேண்டியது

பிம்பம் என்பதால் பிணம் என்று
எண்ணாதே !!!
உயிர்கொண்டதால் நீ உண்மை
என்று ஆகிவிடாய்!!!
இனியேனும் எனை உயிர்பித்து
மகிழ்விப்பாயா!!! என்று

மின்வெட்டிற்கு நன்றி சொன்னது

நிழலுடன் நிலவு ரசித்திருந்தேன்
தெருவிளக்கு உயிர்பித்து
நிழலை விழுங்கியது!!
மின்(னை) வெட்ட வேண்டும்
போலிருந்தது

நிழலாய் படியிறங்கி
குளியலறை விளக்கிட்டு
உட்புகுந்தேன்! வெளியே
தொலைக்காட்சி தொடர்
நாடக ஒளிபரப்பு ஓசை!!

குளியலறையில் கும்மாளமிட்டு
குதூகளித்தது நிழல் !!

செவிடனாய் !!!
வெளியே சென்றேன். . . . . . . .
ஒவ்வொருமுறையும்
நிழல் கழுவி நிஜமுடுத்த
முற்பட்டு தோற்றுக்கொண்டே
இருக்கிறேன்
நிழலாகிய நான்!!!

இந்த இருளில்
எதில் இருந்து எது வரை
என்னுடைய நிழல்.

கல்யாண கண்ணன்

# வரந்தரும் தெய்வம்!

சுந்தர் புருஷோத்தமன்

“பண்போட அன்போட நலமோட வளமோட நூறு வருஷம் நீடூழி வாழணும்டா கண்ணா ”

தாத்தா பொக்கைவாய் சிரிக்க மலர்தூவி, பேரன் வருணை
ஆசிர்வாதம் செய்தார்.

“தாத்தா! பூப்போட்டு ஆசிர்வாதம் பண்ணி எஸ்கேப் ஆகற டக்கால்ட்டி வேலைலாம் இங்க செல்லாது. அண்ணாக்கு வருஷா வருஷம் பர்த்டே கிஃப்ட் வாங்கித்தருவியே? இந்த வருஷம் எதும் இல்லியாடிம்?!”

நர்மதா தாத்தாவிடம் கேட்டுவிட்டுக் கண்சிமிட்டினாள்.

“யாருடி சொன்னா எதும் இல்லனு? இப்ப சொல்றேன் கேட்டுக்க.. என் சொத்தே அவனுக்குத்தான். பத்திரம் எடுத்துட்டு வர சொல்லு உங்கப்பனை. இப்பவே கையெழுத்து போடறேன் எல்லாத்துலயும்”

தாத்தா மேற்கண்ட வசனத்தை சிவாஜி கணேசன் கணக்காய்
சொல்லிவிட்டு, மேல்முச்சும் கீழ்முச்சும் வாங்க, நர்மதா சிரித்தாள்.

“தாத்தா, எல்லாம் சரி. நிமிஷத்துல பேத்தி நானொருத்தி இருக்கறதயே மறந்துட்டயே நீ!? எல்லாம் பேரனுக்குன்னா.. அப்போ பேத்திக்கு என்னவாம்”

“ஏண்டி கண்ணு, உனக்கு தான் தாத்தா நான் இருக்கனே அப்புறம் என்னவாம்?”

தாத்தா.. மீசையை முறுக்கிக்கொண்டே பேத்தியை கேட்டுவிட்டுச் சிரித்தார்.

“நல்லா தான் நீ ஏமாத்தற என்னை..” என்றுவிட்டு நர்மதாவும் சிரிக்க, அந்த இடமே கலகலப்பாயிருந்தது. தாத்தா அன்புடன் நர்மதாவின் தலையைக் கோதி உச்சிமுகர்ந்தார்.
நர்மதா தாத்தாவின் கன்னத்தைச் செல்லமாய்க் கிள்ளினாள்.

“இந்தா.. நீயே இத வருண் கிட்ட குடு” என்று பிறந்த நாள் பரிசாகத் தான் வாங்கி வைத்திருந்த பைக்கின் சாவியை சட்டைப் பைக்குள்ளிருந்து எடுத்து நர்மதாவிடம் கொடுத்தார் தாத்தா.

நர்மதா விழிவிரிய அதை வாங்கி, வருணிடம் நீட்ட, வருண்
வாய்பிளந்தான்.



“தாத்தா ஐ லவ் யூ! ஐயோ தாத்தா! என்ன இப்டி எனக்கு சர்ப்ரைஸ்- லாம் குடுக்கற நீ?! எவ்ளோ சந்தோஷமா இருக்கு தெரியுமா? எதிர்ப்பார்க்கவே இல்ல. யு ஆர் க்ரேட் தாத்தா..”

இன்ப மழையில் நனைந்தவன் சட்டென்று தாத்தாவைக் கட்டியணைத்து அவர் கன்னத்தில் முத்தமிட்டுவிட்டு துள்ளலாய் பைக்கை நோக்கி ஓடினான்.

தாத்தா, அவன் ஓடுவதை சிரித்தவாறே பார்த்துக் கொண்டிருந்தார்.

“டேய், என்னை ஒரு ரவுண்டு கூட்டிட்டு போடா..” நர்மதா திரும்பிப் பார்த்து அவனை நோக்கிக் கத்தினாள்.

“கூட்டிட்டு போய்ட போறான். அது யாரு நிஷாவா? உஷாவா? அவ கேக்காமலேயே இந்நேரம் ஒம்பது சுத்து சுத்தியிருப்பான். நான் என் வயசுக்கு எப்படி இருந்தேனோ அதே மாதிரி இருக்கான் இவனும். உங்கப்பன் தான் எதுக்கும் லாயக்கில்ல. என்ன பண்ண.... தவறி, அவன் அவனோட அம்மா மாதிரி பொறந்துட்டான்” என்றபடி தாத்தா மீண்டும் மீசையைத் தடவ,

divya vasan

நிகழும்
நிகழ் காலத்தில்,
நிகழாத நிகழ்வுகளால்,
நெகிழ்கிறேன்..
உன்
நினைவுகளின்,
நிழல்களில்.

“என்ன நடக்குது இங்க?” என்றவாறு நர்மதாவின் தந்தை அங்கே வந்து சேர்ந்துகொண்டார்.

“ஒன்னுமில்லடா. உம்பிள்ளை, அடுத்த வருஷம் கணக்குல ஃபர்ஸ்ட் மார்க் வாங்கினான்னா, அவனுக்கு கார் வாங்கித் தரலாமான்னு நர்மதா கிட்ட கேட்டுட்டு இருந்தேன், அதுக்குள்ள நீ வந்துட்ட அவ்ளோதான்.
என்ன நர்மதா?”

தாத்தா நர்மதாவைப் பார்க்க, நர்மதா சிரித்தாள்.

“சரி சரி பாஸாட்டும் பாப்போம். அப்பா! கோயில்ல வருண் பேருக்கு அர்ச்சனை பண்ணணுமாம். அவ அம்மா ப்ரசாதம், அர்ச்சனைக்கு தேவையானதெல்லாம் எடுத்துவச்சிருக்கா. கொஞ்சம் நீங்களும் நர்மதாவும் போய்ட்டு வந்துருங்களேன்?! எனக்கு போர்ட் மீட்டிங் இருக்கு காலைல. சாயந்தரம் வரும்போது நானும் அப்டியே கோயிலுக்கு போய்ட்டு வந்துடறேன்.”

வருணின் அப்பா, தாத்தாவிடம் விண்ணப்பித்தார். தாத்தா
ஏற்றுக்கொண்டார்.

“சரிப்பா. அத விட்டா எங்களுக்கு வேற என்ன வேலை. கொழந்தே, போய்ட்டு அர்ச்சனை சாமான்-லாம் எடுத்துட்டு வாம்மா. போய்ட்டு வந்துடுவோம்”

“சரி தாத்தா!” நர்மதா சமையல் கட்டுக்குள் ஓடினாள்.

தாத்தாவுக்கும் நர்மதாவிற்கும் இடையே எப்போதும் இவ்விதமான உரையாடல்கள் உற்சாகம் நிறைந்ததாய் நடந்தவாறே இருக்கும்.
இருவரின் உரையாடலும் சொல்லப்போனால் இரு சம வயதொத்த நண்பர்கள் தமக்குள் சீண்டிச் சிரித்து மகிழும் உரையாடலைப் போல் தான் இருக்கும். சூரியன் மலர்ந்தால் எவ்விதம் நிலமெல்லாம் பகலில் ஜ்வலிக்குமோ.. அவ்விதமே தாத்தாவும் அவளும் இருக்குமிடத்தில் சிரிப்புக்கும் சந்தோஷத்திற்கும் குறைவேயிருக்காது.

இருவரும் வருண் பேரில் அர்ச்சனை செய்யவேண்டி அதற்கான பொருட்களுடன் காரில் கோயிலுக்குப் பயணப்பட்டனர்.

நர்மதா காரை ஸ்டார்ட் செய்ய, தாத்தா உள்ளிருந்த சிடி-ப்ளேயரில் தருமபுரம் சுவாமிநாதன் உருகிப்பாடும் திருவாசகத்தை இழைய விட்டார்.

தாத்தா சில போதுகளில் மட்டும் மிகுந்த மௌனம் காப்பது உண்டு.

அதில் ஒரு பொழுது, திருவாசகம் கேட்கும் பொழுது!

மனிதர்.. இந்த பாடல் இசைக்கப் படும்போது மட்டும் அப்படியே இமைமூடி அதன் வரிகளில், வரிகளின் உருக்கத்தில் தானும் கரைந்து மறைந்து போவார்.

இன்றும் அப்படித்தான். தன்னை மறந்த நிலையில் அமுதத்து இனிப்பில் கட்டுண்ட எறும்பாய் மோன நிலையில் கண்மூடி அமர்ந்திருக்க, நர்மதா அவர்நிலை கண்டு இளநகை பூத்தாள்.

“இந்த பாட்ல என்னமோ இருக்கு தாத்தா! ஆளை

## நகம்..

ratna devi



நகம்...

மோட்சம்தான் உனக்கு....

என்னவளின் இதழ் பட்டு

மடிவதால்...

என்னமா உருக்கிடறது? நானும் எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்லேர்ந்து
பாக்கறேன். இந்த பாட்டு போட்டா, நீ அப்டியே சைலன்ட் ஆய்ட்ற.
எனக்கு முழுக்க புரியலன்னாலும் கூட எனக்கும் இத கேக்கும் போது என்னவோ பண்ணுது.”

தாத்தா பேத்தியின் வார்த்தைகளை உள்வாங்கியவராய் புன்னகையோடு அவள் பக்கம் திரும்பினார்.

“ஆமாம்மா. ஒருத்தர் இதுக்கு மேல தன்னைத் தாழ்த்திகிட்டு கடவுள் கிட்ட உருக முடியுமான்னு இத ஒவ்வொருவாட்டி கேக்கும் போதும் தோணும். நமக்கு அந்த மாதிரி பக்குவம் என்னைக்கு வாய்க்குமோ-னு இத கேக்கும்போதெல்லாம் நெனச்சுக்குவேன். மனசு மும்முரமா வேல செய்யும் போது வாய் மௌனமாய்டறது சகஜந்தானே? அதான் அப்பப்போ தூங்கினா மாதிரி உக்காந்துடறேன்” சிரித்தார்.

அவளும் பதிலுக்குச் சிரித்தாள்.

“ம்ம்.. இந்த பாட்டுக்கு பொருள் என்னனு படிச்சு தெரிஞ்சுக்கணும்னு இருக்கு. தினசரி வாழ்க்கைக்கும் இதுமாதிரி பாட்டுங்கள்லாம் அந்த காலத்துல இருந்திருக்கும் தானே? குழந்தைங்களுக்கு ஆத்திச்சூடி மாதிரி?!”

“ம்ம். இல்லாம என்ன? பிறந்ததிலேர்ந்து நாம கண்ண மூடற வரைக்கும் நம்ம வாழ்க்கைய முறைபடுத்திக்கன்னு நெறய பாட்டுங்க பாடி வச்சிருக்காங்கம்மா. என்ன பேசணும், எப்படி பேசணும், எப்படி உடுத்தணும், எப்படி சாப்பிடணும்னு நெறய்ய நெறய்ய..

திருக்குறள் மாதிரி, திருமூலர் எழுதின திருமந்திரம்ங்கறதும் அதுல ஒன்னு. ஔசத்தியானதும்

கூட அன்பு தான் கடவுள். அதனால எல்லார்க்கிட்டயும் அன்பு செலுத்து; மனுஷங்க தான் நடமாடும் கோயில். அவங்களுக்கு உதவி செய். அது கடவுளுக்குப் போய்ச்சேரும்; ஒன்னுதான் கடவுள்; ஒன்னுதான் குலம் இப்டியா அற்புதமான விஷயங்கள் நெறய்யவும் ஆயிரம் ஆயிரத்தைநூறு வருஷத்துக்கு முன்னமே ஒருத்தர் பாடி இருக்கார்ங்கறது எத்தனை பெரிய விஷயம்?! அதை நாம சரியா புரிஞ்சுகிட்டு சரியா வாழ்ந்தோம்னாக்க அதவிட ஒசத்தியான வாழ்க்கை
இந்த உலகத்துல வேற என்ன இருக்கமுடியும்?''

நர்மதா, தாத்தாவைப் பார்த்து மீண்டும் புன்னகைத்தாள். மௌனமே வார்த்தையாய் அங்கே பல நிமிடங்கள் உரையாடல் நிகழ, இதற்கிடையில் சீராய் சென்றுகொண்டிருந்த வாகனம் சட்டென நின்றதும் மௌனம் கலைந்தது.

''என்னம்மா வண்டிய நிறுத்திட்ட?''

''கோயில் வந்துருச்சி தாத்தா. இப்போ தான் பாத்தேன்''

''என்னம்மா சொல்றே? இன்னும் அதுக்கு நாம நாலஞ்சு கிலோமீட்டர் போகணுமே?!''

''ஐயோ தாத்தா. பேசிக்கிட்டே இருக்காம சட்டுனு எறங்குங்க.
இல்லையானா கோயில் போயிடும். சீக்ரம் சீக்ரம்''

''என்னம்மா சொல்ற? எனக்கு ஒன்னும் புரியலயே?!'' கேட்டுக்கொண்டே தாத்தா இருக்கையினின்று விடுபட்டுக் கீழிறங்கினார்.

அதற்குள் நர்மதா காரின் பின்புறத்தில் வந்த வழியே ஓடிக்கொண்டிருந்தாள். இந்த பெண்ணுக்கு என்னவாயிற்று? ஏன் இப்படி நடந்துகொள்கிறது என்று குழம்பியவாறே… அவள் போகும் திசையில் விழிகளைச் செலுத்த, சட்டென பொறிதட்டியது.

அட நாம் தான் முட்டாள் தனமாய் நின்றுகொண்டிருக்கிறோம் என மனதுள் எண்ணியவாறே உள்ளேயிருந்த பைகளைச் சுமந்துகொண்டு நர்மதாவை நோக்கித் தானும் ஓடினார்.

மூச்சிரைத்தது அவருக்கு. அவளருகில் சென்றதும் முகம் முழுதும் பூரிக்க நர்மதாவை நோக்கிச் சிரித்தார்.

நர்மதாவும் புன்னகையுடன் அவரிடமிருந்து பையை வாங்கிக்
கொண்டாள். பிறகு அங்கே துரிதமாக செயல்கள் அரங்கேறின.

கொண்டு வந்திருந்த வாழை இலையில் பிரசாதம் பரிமாறப்பட்டது. பழங்கள் பரப்பப் பட்டன. கொண்டு வந்த நீரை அருகில் வைத்தாள் நர்மதா. வைத்தது தான் தாமதம், நடமாடும் கோயில் தெய்வம், தன் அகோரப் பசியால் வெடுக் வெடுக்கென வைத்திருந்ததையெல்லாம் கணமும் தாமதியாமல் வேகமாய் விழுங்கிற்று.

## என் தமிழே என்றும் நிலைக்கும்

நிலாசூரியன்

தமிழை என்றும் காக்க
தலையையும் தானம் தருவேன் - செந்
தணலில் எரித்தால்கூட - செந்
தமிழை நானும் மறவேன்…

ஈன்றவள் தந்தது தாய்ப்பால் - அட
தமிழும் எனக்குத் தாய்ப்பால்
குறளில் குடித்தேன் முப்பால் - முத்
தமிழில் சுவைத்தேன் தேன்பால்…

என்னிலம் நன்னிலம் என்பேன் - அட
என்னுயிர் தமிழே என்பேன்
எங்கும்தமிழை விதைப்பேன் - எனை
புதைத்தாலும் தமிழாய் முளைப்பேன்…

பாரில் பலமொழி இருப்பு - அதில்
பைந்தமிழேத் தனிச் சிறப்பு
காரில் குதிக்கும் மழையும் - அட
கவிதைகள் இசைக்கும் தமிழில்…

சொல்வளம் கொண்டது தமிழாம் - இல்லை
பல்வளம் நிறைந்தது என்பேன்
தேனாய் இனிக்கும் தமிழாம் - இல்லை
அதைவிட இனிக்கும் என்பேன்…

எழில்வளம் கொண்டது தமிழாம் - இல்லை
பேரெழில் நிறைந்தது என்பேன்
இலக்கியம் கொண்டது தமிழாம் - பல்
இலக்கணம் தந்ததும் அதுதான் என்பேன்…

குன்றி லேறி உரைப்பேன் - என்
தமிழே வாழ்க வென்று
குறும்பா நெடும்பா தொடுப்பேன் - என்
தமிழே உயர்ந்தது என்று…

நாற் றிசைகளும் ஒலிக்கும் - என்
தமிழே என்றும் நிலைக்கும்
இவ்வுலகம் அழிந்தால்கூட - அது
இன்னொரு உலகம் படைக்கும்…!!!

தெய்வத்தின் பசியுணர்ந்த இருவரின் கண்களிலும் கண்ணீர் தளும்பியது.

அப்போது தான் அலைபேசியில் மகளை அழைத்திருந்தாள் அவள் அம்மா.

''நர்மதா கோயிலுக்குப் போயிட்டீங்களாம்மா?''

''போய்ட்டோம்மா!''

''கூட்டம் நெறய்ய இருக்குமே. சாமி நல்லா பாத்தீங்களா?!''

“இந்த கோயிலுக்கு நெறய்ய கூட்டம் வர்றதில்ல போலிருக்கு. நானும் தாத்தாவும் மட்டும் தான் இருக்கோம். நல்ல தரிசனம்! ரொம்ப சந்தோஷமா இருக்கும்மா”

தாத்தாவைப் பார்த்துக் கொண்டே அம்மாவுடன் பேசினாள் நர்மதா. தாத்தா புன்னகைத்தார்.

உண்டு முடித்த பின்னர் தெய்வத்திற்குக் கை கழுவ நீர் ஊற்றினார் தாத்தா.

கைகளைத் துடைத்துக் கொண்டு, மீதமிருந்த சில பழங்களைத் தன் கிழிந்த பையில் போட்டுக் கொண்டது அந்த வயோதிகக் கந்தலாடைத் தெய்வம். பின் இருவரையும் நோக்கிக் கண்ணீர் மல்க, “ஐயா நீங்க நல்லா இருக்கணும்! அம்மா நீங்க நல்லா இருக்கணும்! உயிர் போற நேரத்துல சாப்ட குடுத்து உதவுறீங்களே… ஐயா நீங்க நல்லா இருக்கணும்! அம்மா நீங்க நல்லா இருக்கணும்!” என்றவாறே பலமுறைத் தன் கரங்கள் கூப்பி, வாய் குழறக் கும்பிட்டவாறே தள்ளாடித் தள்ளாடி மெதுவாய் நடக்க,

நடக்கும் தெய்வத்திடம் அதன் பெயர் கேட்டார் தாத்தா. தன் பெயர் சுருக்கிச் சாமி என்றது, சாமிக்கண்ணு என்கின்ற அந்த தெய்வம்.

சிலிர்த்தார்கள் இரண்டு பேரும். தெய்வம் அவர்களைப் பார்த்துச் சிரித்தது.

“சாமி ஆசிர்வாதம் பண்ணிருச்சும்மா!”

அம்மாவிடம் சொல்லிவிட்டு அழைப்பைத் துண்டித்தாள் நர்மதா.

## ஒன்று பட்டால் உண்டு வாழ்வு

சுதா

வரலாற்றை தின்று செரித்த
கறையானுக்கு தெரியும்

கன்னித்தமிழில் எழுதியதால்
பனை ஓலையும்
கற்கண்டாய் இனித்ததென்று..!!

மறத் தமிழனை கண்டால்
மதக்களிறு மண்டியிடும்
வேங்கை வெகுண்டோடுமென்று..!!!!

அன்று
வாளும் உறையுமாய் தமிழர்கள்

அதோ அந்த இமயம்
தமிழ்க் கொடியை தாங்கி நின்றது
இதோ இந்த வங்காள விரிகுடா
தமிழெல்லையாய் படர்ந்திருந்தது..!!!!

இல்லையென்ற குறையின்றி
அள்ளி கொடுத்து வாழ்ந்தனர்..!!!

இன்று
இரைத் தேடிப் போன
பறவைகளைப் போல பிரிந்துள்ளோம்

நம் கோட்டையிலே
நரிகள் ஊளையிடுகிறது...!!!

ஓநாய்கள் வேட்டையாடுகிறது
தமிழ் சிங்கங்ககளை
பூனைகள் விரட்டுகிறது
புலியை விரட்டிய மங்கையரை..!!!

தங்கமது மண்ணில்
மறைந்துள்ளதைப் போல
மக்களோடு மக்களாய்
உலகெங்கிலுமுள்ள தமிழர்களே..!!!

ஒன்று பட்டால் உண்டு வாழ்வு
மறந்தாயோ ?

அணுக்களிரண்டு சேர்ந்ததால்
அண்டத்தை ஆளும்
கதிரவன் தோன்றினான்

தமிழர்கள் ஒன்று சேர்ந்தால்
அகிலத்தையே ஆளலாம்..!!!

அலை
கூடி .. கூடி ..

வந்ததால் உடைகிறது கரை

தமிழர்கள் கூடினால்
எதிரிகளின்
இடுப்பொடித்து அடுப்பெரிக்கலாம்..!!!!

காற்று கைகோர்த்து
ஓடி.... ஓடி....
வளைக்கிறது மரத்தை

தமிழர்கள் கைகோர்த்தால்
ஈழத்தில் கண்ணீர் மறையும்
தமிழீழம் பிறக்கும்..!!!

தமிழர்கள் பாதரசம் போல
புறத்திலே சிறு துளியாயினும்
அகத்திலே
உச்ச உஷ்ணத்திலும்
உருகாத உலோகம்
என்று சொல்லி ஒன்று கூடுங்கள்..!!!

இல்லையன்றால்
நாளை நம்
குஞ்சுகள் வாழ கூடு இருக்காது..!!!

# குறளின் குரல்

சுந்தர் புருஷோத்தமன்

அறத்துப்பால் – பாயிரவியல்
03. நீத்தார் பெருமை



**21:** ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு.

*ஒழுக்க மோம்புதல் மேலோர்க்கழகாம் – அஃதோம்பி*
*ஒவ்வாதன ஒழித்தார்தம் ஒப்பிலா குணமதை*
*உவப்புடன் துணிந்தே உலகுக் குரைக்கும்*
*உயர்ந்தோர் வாய்மொழி நந்நூல்.*

**22:** துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

*விருப்பு வெறுப்பதைத் துறந்தார் பெரியார்-அவர்தம்*
*பெருமையி னளவும் பெரிதஃது*
*பெருநிலமிதனில் பிறந்திறந்தா ரெண்கணக்கைப் போலும்*
*அளவிடற்கரிதா மறிவீர்.*

**23:** இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு.

*இம்மையினின்னலு மறிவார்; மறுமையினின்பமு மறிவார்;*
*துறக்கு மறமதைத் துணிந்துகைக் கொள்வா ரவர்புகழ்*
*அளவிற் பெரிதென அழியா திலங்கி*
*உலகிதில் நிலைபெறு முணர்வீரே.*

**24:** உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்தது.

*திண்மனத் தோட்டியால் பொறிகளாம்*
*ஐங்களிறடக்குவன் வல்லோன் – அவனே*
*துறவெனும் நிலந்தனில் துளிர்விடத் தகுந்ததோர்*
*முதிர்ந்தநல் வித்தென விளங்குவனாம்.*

**25:** ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

*ஐந்து புலன்களி னாசை யஃதறுத்தவன்*
*அனைத்தையு மறுப்பவ னவன் திறமஃது*
*அவ்வுலகென்னும் வானதற் கரசாம்*
*இந்திரன் செறுக்கது மறுக்கு மஃதறிவீர்.*

**26:** செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

*துறப்பன துறப்பார்; துறந்து பின்*
*செயற்கருஞ் சீரிய செயல்செய்வா ரவரே பெரியாராம்*
*துறப்பன துறந்தும் பெரியாரோடே கூடித்திரினுங் குணமின்றி*
*அருஞ்செயலேது மாற்றார் சிறியா ரெனப்படுவர்.*

**27:** *சுவைஒளி ஊறுஓசை நாற்றமென ஐந்தின்*
*வகைதெரிவான் கட்டே உலகு.*

*சுவையுணர் நாவும் ஒளியுணர் விழியும் செவியும்*
*நாற்றமறி பொறியும் தோலுமைம்புலனாம்.*
*ஆய்ந் தவற்றின் ஆசையஃதறுப்பான் - உலகிதை*
*யாள்வா னடக்கி.*

**28:** நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

*துறப்பன துறந்தாரைச் சான்றோரென்பர்*
*சான்றோரே நன்மொழிபேசும் நலமுடையார்*
*நலமுடையாரவர் புகழ்தன்னை வாழ்வாங்குவாழுமவர்*
*மந்திரச்சொல்லே மறைக்காமற் சொல்லும்.*

**29:** *குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி*
*கணமேயும் காத்தல் அரிது.*

*பண்பெனும் மேருவின் மீதிருப்பர் மேன்மக்கள்*
*அவரே சினமேதுங் கொள்ளா குணமுடையாரவர்*
*சினமேதுங் கொண்டாராயினு மச்சினம்*
*கணமேது மாங்கே நிலைத்த லரிதாம்.*

**30:** *அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்*
*செந்தண்மை பூண்டொழுக லான்.*

*அறமதை யணியெனக் கொள்வார்*
*அருளுட னுயிர்க்கெல்லா மன்பினைப் பொழிவார்*
*அறம்நிறை அருள்நிறைச் சான்றோ ரவரே*
*அந்தணராவது மறிவீர்.*

- *தொடரும்*

# நட்பில் ஒருவகை

கனகீஸ்



உண்ணும் போதும் உனக்கொரு
வாய் பிரித்தெடுக்கிறேன்…
உறங்கும் போதும் எனக்கரிகலோர்
இடம் கொடுக்கிறேன்…
உந்தன் பெயர் மந்திரமாய்
தினம் உச்சரிக்கிறேன்…
உதட்டுச்சத்தம் கேட்டே
நானும் நச்சரிக்கிறேன்…
○ ○ ○

கொஞ்சிக்கொஞ்சி உந்தன்
மார்பில் முகம் புதைக்கிறேன்…
வஞ்சிஎந்தன் வளையல் சத்தம்
கேட்கத்தானே தவம் கிடக்கிறேன்…
மிஞ்சிப்போகையில் கெஞ்சியே
நானும் அடம் பிடிக்கிறேன்…
தஞ்சம் உந்தன் நெஞ்சம்
என்று உடன் வருகிறேன்…
○ ○ ○

மூச்சுக்காற்று வீசிடமறுத்தால்
சுவாசங்கள் இல்லையடா…
வார்த்தைகள் கொண்டு வாழ்ந்திடும்
வாழ்க்கையில் மௌனங்கள் தொல்லையடா…
பார்வைகளின்றி பரிசங்களின்றி
நெஞ்சைத் துளையிட்டாய்…
நேற்றையநாளும் இன்றையநாளும்
வலிகொண்டு நகர்கின்றதே…
○ ○ ○

கூட்டுப்புழுவாய் என்னைச்சுருக்கி
உன்னில் புகுத்திவிட்டேன்…
முன்போல் இல்லா ஏக்கங்கள் கொண்டு
தூக்கங்கள் தொலைத்துவிட்டேன்…
தலையணையோடும் தனியுறவாடும்
தவிப்புகள் கொண்டுவிட்டேன்…
நீ பேசிட மறுக்கையில் வார்த்தைகள்
எல்லாம் நெஞ்சில் கனக்கிறதே…
○ ○ ○

வாழ்ந்திடும் காலம் குறைவென நினைத்தே
உன் வார்த்தைகள் சேர்க்கின்றேன்…
உதட்டுப்பிரிவில் ஒற்றியெடுக்கும்
ஒற்றைச்சொல் தாயேன்…
நட்பில் நானும் நாணயம் கொண்டே
நடந்திடவில்லையடா - உன்
ஒப்புதல் இன்றியே என்னில்
உன்னை சேர்த்துக்கொண்டுவிட்டேன்…
○ ○ ○

நான் தந்த துயர்கள் தாய்மை
கொண்டே தாங்கிக்கொண்டுவிடு…
இனி வந்திடும் காலம் வசந்தங்கள்
வீசிடும் என்று நீ நம்பிவிடு…
என்னுயிர்த்தோழா என்னுயிர்த்தோழா
என் தனிமை போக்கிவிடு …
உன்மனம் தந்தே என்னை முழுதாய்
ஏற்றுக் கொண்டுவிடு…
○ ○ ○

## மழை

pvlkanthan

வானமென்னும்
வீட்டினிலே
இடியென்னும்
பேச்சினிலே
மின்னலென்னும்
சிரிப்பினிலே
கரு மேகத் தம்பதிகள்
உறவு கொண்டதினால்
பிறந்த குழந்தையின
கண்ணீர்!

## ஹைக்கூ

கார்த்திகா

என்ன எழுதவென்று
யோசித்து யோசித்து
மனம் குழம்பும் வேளையிலும்
என் கரங்கள் கிறுக்குகின்றன..
மிகத் தெளிவாய் ,
உன் பெயரைமட்டும் !

ஒரு பக்கம் முழுதும்
சிறிதும் இடைவெளி என்பதின்றி
நன்பொருள் உள்ளடக்கிய
மிகச்சிறிய ஓர் வார்த்தை
ஹைக்கூவாய்
நீ புன்னகைக்கிறாய் அதில் !..

# பொம்முவும் அமிர்தப் பானையும் – தொடர்

லோகேஷ் ஜெயகோபி



**அத்தியாயம் -1**

**பிறந்தநாள் பரிசு**

"ஹேப்பி பர்த்டே " என்று எல்லாரும் பாட ஆரம்பித்தனர் . வீடே தோரணங்களால் ஜொலித்துக் கொண்டிருந்தது . ஏனென்றால் இன்று அரவிந்தின் பிறந்தநாள் . 13 வயது தொடங்கும் அரவிந்தின் பெற்றோர் இம்முறை அவன் பிறந்த நாளை கோலாகலமாக கொண்டாட ஏற்பாடு செய்திருந்தனர் .

அரவிந்த் கேக்கை வெட்டி தன் பெற்றோருக்கு மகிழ்ச்சியுடன் ஊட்டினான். ஆனால் சஞ்சய் மட்டும் முகத்தில் வெறுப்போடு நின்றிருந்தான் . அவன் தான் அரவிந்தின் ஒரே தம்பி, வயது 10. சஞ்சய்க்கும் அரவிந்துக்கும் எப்போதும் போட்டியும் சண்டையும் தான். அரவிந்த் சஞ்சையை பார்த்து பல்லிளித்தான். சஞ்சய் முறைத்தபடி தன் அண்ணனை மிரட்டினான்.

பிறந்த நாளுக்கு வந்திருந்த விருந்தினர்கள் அரவிந்துக்கு பரிசை குடுத்து விட்டு செல்ல ஆரம்பித்தனர். அன்று அரவிந்த் மிகவும் சந்தோஷத்துடன் இருந்தான். அவன் தன் பிறந்தநாள் பரிசுகளை பிரித்துப் பார்க்கும் நேரம் வந்தது.

நேரம் 9.30, அரவிந்த் உணவு உண்டப்பின் தன் அறைக்கு சென்றான். தன் படுக்கை நிறைய பரிசுகள் காத்திருப்பதை கண்டு புன்னகைத்தான். படுக்கை மேல் அமர்ந்து தன் பரிசுகளை பிரித்துப் பார்க்க ஆரம்பித்தான் அரவிந்த். விடியோ கேம்ஸ் , புத்தகங்கள் , அழகு கடிகாரம் என்று ஒவ்வொரு பரிசுகளையும் வியப்புடன் கண்டான். எல்லா பரிசை பிரித்து பார்த்து முடித்தான் அரவிந்த்.

குடுகுடுவென அவன் அறைக்கு ஓடிவந்த சஞ்சய் "நான் வர்றதுக்குள்ள எல்லாப் பரிசையும் பிரிச்சிடியா?" என்று கோவது கேட்டான்.

"இதெல்லாம் என்னோட பரிசு கண்ணா ! உனக்கு எதுக்கு காட்டணும்?" - அரவிந்த்

"ரொம்ப பண்ணிக்காத ! எனக்கும் அடுத்த வர்ஷம் பிறந்த நாள் வரும். அப்போ பாத்துக்கிறேன்! கீழே ஒரு பரிசு கிடக்கு பாரு! அதையும் நீயே பிரிச்சிடு !" என்று கோவத்துடன் சஞ்சய் கூறிவிட்டு அங்கிருந்து சென்றான்.

அரவிந்த் தன் படுக்கை கிழே குனிந்து பார்த்தான். அவன் பார்த்த மற்ற பரிசுகளை விட கொஞ்சம் பெரிதான பரிசு அங்கே இருந்தது. வேகமாக சென்று அதை எடுத்தான் அரவிந்த். இவ்வளோ பெரிய பரிசை இவ்வளவு நேரம் தான் காணவில்லை என்று நினைத்தான். காகிதத்தால் சூழப்பட்ட அந்த பரிசின் மேல் ஒரு பொம்மை கடையின் விலாசம் மட்டும் இருந்தது.

அரவிந்த் அது என்ன பரிசாக இருக்குமென ஆர்வத்துடன் அதை பிரிக்க ஆரம்பித்தான். கடைசியில் அதில் ஒரு அழகான பெண் பொம்மை ஒன்று இருந்தது. சிவப்பு கவுனும் , ரெட்டைக் ஜெடைகளும், அழகான கண்களும் கொண்டிருந்தது அந்த பொம்மை. ஆனால் அந்த பொம்மையை கண்டு அரவிந்துக்கு எந்த மகிழ்ச்சியும் இல்லை.

"வெறும் பொம்மையா?" என்று அரவிந்த் அந்த பொம்மையை தன் அலமாரியில் போட்டு அதன் கதவை மூடினான்.

அரவிந்த் படுகையில் படுத்து உறங்க ஆரம்பித்தான். அலமாரியில் இருளில் கிடந்தது அந்த பொம்மை.

✡ ✡ ✡

வழக்கம் போல அரவிந்த் பள்ளி சென்றான். வகுப்பிலேயே நண்பர்கள் இல்லாமல் தனியாகவே இருக்கும் ஒரே ஜீவன் அரவிந்த் மட்டும் தான். எப்போதும் தனியாகவே பள்ளியில் இருப்பான். இதன் காரணமாகவே அவனை ஏமாற்றும் மாணவர்கள் சிலர் இருகின்றனர். அதில் ஒருவன் தான் அன்பரசு.

அன்பரசு ஒரு முரட்டுச் சிறுவன். தனக்கென ஒரு நான்கு சிறுவர்களை விட்டுக்கொண்டு வகுப்பையே மிரட்டி வருபவன். அவனுக்கு யார்ரும் அடிப்பணியவில்லை என்றால் அடி உதைதான்.

அன்று உணவு நேரம் வந்தது. அரவிந்த் தன் உணவு டப்பாவை பையிலிருந்து எடுத்தான்.

"என்ன தம்பி? இனிக்கு என்ன லஞ்சு?" என்று அன்பரசு அரவிந்தை மிரட்டியபடி கேட்டான்.

"இனிக்கு எனக்கு ரொம்ப பசிக்குது.நான் உனக்கு

நாளைக்கு லஞ்சச கொண்டு வறேன்'' என்றான் அரவிந்த் பாவமாக.

## துவளாதே தொலையாதே

aro...



இதோ...
இனியேதும் இல்லை;
இருள் மட்டும் எச்சம்

தற்கொலைக்கு தவிக்கிறாயோ...?!
ஏதும் இல்லை
எண்ணம் உனக்கா.....?

நன்றாக சிந்தி...

எரிச்சல் எரிக்குச்சி;
விரக்தி விறகு;
இவை
இருக்க உடல்;
உடலை உசுப்ப உயிர்;
கடந்து செல்ல கால்கள்;
கன்னம் தாங்க
கவலையில் கசியும்
கண்ணீர் வாங்க
உனக்கு துணையாய் கைகள்:

இப்போது பார்...
எத்தனை உன்னிடம்.

தோல்வியில்
கோபம் வந்தால்
முறையாக்கு; வேல் முனையாக்கு
வீரன் என்பார்கள்

அழுகையா....?
அடக்கு
அப்போ அப்போ அழு;
நடிகனாக்கி ரசிப்பர்கள்;

இன்னும் உனக்குள்
தற்கொலை தாத்துவமா...?

நிறுத்து உன் வாதத்தை;
பிரச்சனைக்கு தீர்வெல்லாம்
பிணம் தான் எனில்
பிணங்களின் பிறப்பு விகிதம்
நூற்றுக்கு நூறு;

உன்னை தாண்டி பார்
வெவ்வேறாய் எத்தனை பேர்;
உண்மை புரியாமலா போய்விடும்

போராடு.....
காத்திருக்கு வரலாறு;
மிச்சமிருக்கு
உனக்கும் சில
ஏடு

''ஒழுங்கா நீயே குடுத்திடு! இல்லனா தேவை இல்லாம அடிவாங்குவ '' என்று தெனாவட்டாக கூறினான் அன்பரசு. அரவிந்த் தயங்கிபடி பார்த்தான்.

உடனே அன்பரசின் நண்பன் ஒருவன் அரவிந்தின் உணவு டப்பாவை பிடுங்கினான். தடுக்க நினைத்த அரவிந்துக்கு மூக்கில் அடிப்பட்டு லேசாக இரத்தம் சொட்ட ஆரம்பித்தது.

''சொன்னா கேக்கணும் இல்லனா இப்படிதான் ஆகும்'' என்று கேலிசெய்து விட்டு அன்பரசு கிளம்ப அவன் நண்பர்கள் அவன் பின்னே சென்றனர்.

அரவிந்துக்கு அன்பரசு மட்டும் ஒரு பிரச்னை என்று சொல்ல முடியாது. தனக்கு நண்பர்கள் யாருமே இல்லை இல்லை என்று பள்ளிக்கு சேர்ந்த நாளில் இருந்தே வருந்தி வருவான். என்றாவது தனக்கு நிறைய நண்பர்கள் கிடைப்பார்கள் என்ற நம்பிக்கை மட்டும் அரவிந்துக்கு இருந்தது.

நாட்கள் இப்படியே சென்றது. அன்று வழக்கம் போல சோகமாகவே வீட்டிற்கு வந்த அரவிந்த் தன் அறைக்கு சென்று தன் பையை இறக்கி வைத்தான். தன் அறையே குப்பையாக இருப்பதைக் கண்டான் அரவிந்த்.

''அய்யயோ அம்மா பார்த்தா திட்டிட்டே இருப்பாங்களே.சீக்கிரம் சுத்தப்படுதணும்'' என்று புலம்பியபடி அறையை சுத்தப்படுத்த ஆரம்பித்தான்.

தன் அலமாரியை எதிர்ச்சியாக திறந்த அரவிந்த் தான் வைத்த அந்த பொம்மை இருட்டில் இருப்பதை கண்டான்.தன் உணர்வை போல அந்த பொம்மைக்கும் இருக்கும் என்ற எண்ணத்தில் அதை எடுத்து தன் படுக்கை மேல் அமரவைத்தான்.

இம்முறை அரவிந்துக்கு அந்த பொம்மை அழகாக தெரிந்தது. அதனிடம் பேச வேண்டும் என்று நினைத்தான்.

''என்னை மன்னிச்சிடு! உன் உணர்வு எனக்கு தெரியும். என்னை போல நீயும் தனியாக இருக்கணு இப்பதான் புரிஞ்சுது'' என்றான் அரவிந்த்.

எந்த உணர்வும் இல்லாத அந்த பொம்மையிடம் பேசுவது அரவிந்துக்கு பிடிக்க ஆரம்பித்தது.

''உன் கூட பேசறது எனக்கு ரொம்ப நிம்மதியா இருக்கு. இனிமே நீயும் நானும் நண்பர்கள்! சரியா?'' என்று அந்த பொம்மையின் கன்னத்தை கிள்ளி முத்தமிட்டான் அரவிந்த்.

''ஓய் சின்ன பையா! என்ன பொம்மைக்கிட்ட பேசிக்கிட்டு இருக்க? என்று சஞ்சய் அரவிந்தின் அறை வாசலில் நின்று கேலி செய்தான்.

''உனக்கு என்ன வேணும் இப்போ ?''என்றான் அரவிந்த் வெறுப்பாக.

''அம்மா உன்னை தோட்டத்துக்கு தண்ணி ஊத்த சொன்னாங்க!'' என்று சொல்லிவிட்டு சென்றான் சஞ்சய்.

''ஆனா என் ரூம் ரொம்ப குப்பையா இருக்குடா.நான் சுத்தப்படுத்தணும். நீயே அதை செஞ்சிடுடா ப்ளீஸ்'' என்று மெல்ல கூறினான் அரவிந்த்.

''அது உங்க பிரச்சனை சார்! ''என்று சிரித்துக்கொண்டே சென்று விட்டான் சஞ்சய்.

அரவிந்த் தோட்டத்துக்கு சென்று தண்ணீர் ஊற்ற ஆரம்பித்தான். சிறிது நேரம் சென்றது.

''அரவிந்த் ! நான் சஞ்சயைதான தண்ணீர் ஊத்த சொன்னேன்! அவன் எங்க?'' என்று சமையில் ஜன்னல் வழியாக அரவிந்தின் அம்மா தேவி குரல் கொடுத்தார்.

''டேய் குட்டி பிசாசே!''என்று அரவிந்த் தம்பியை தேடி ஓடினான்.

வெளியே மற்ற சிறுவர்களோடு சஞ்சய் விளையாடுவதை கண்டான் அரவிந்த். அரவிந்துக்கு மீண்டும் ஏக்கம் வந்தது. தானும் அவனை போல நண்பர்களோடு விளையாட முடியவில்லை என்று நினைத்தபடி தன் அறைக்கு சென்றான்.

ஆச்சர்யத்தில் வாயை பிளந்தான் அரவிந்த். அவனுடைய அறையே சுத்தமாகவும் பளபளப்பாகவும் இருந்தது. பொருட்கள் அங்கங்கே இருக்க வேண்டிய இடத்தில் இருந்தது.

காதல் என்னும்
கண்ணாம்பூச்சி ஆட்டத்தில்
தோற்றுவிட்டேன் !!!!
என்னவளை கண்டுபிடித்தும் !!!!!

- பார்த்தீபன் -

அரவிந்துக்கு காபி கொண்டு வந்தார் அவன் அம்மா தேவி.

“பரவா இல்லையே அரவிந்த் .உன் ரூமை சுத்தமா வச்சிருக்கியே..”என்றார் தேவி.

“என்ன சொல்றீங்க? ரூமை நீங்கதான சுத்தம் செஞ்சிருக்கணும்?” என்று புரியாமல் கேட்டான் அரவிந்த்.

“மூளை குழம்பிடுச்ச்சா? இப்பதான் உன் ரூம் பக்கமே நான் வறேன்” என்று தேவி எந்தவித உணர்வில்லாமல் சொல்லிவிட்டு சென்றார்.

“என்ன இது ? ரூமை யார் சுத்தம் செஞ்சிருப்பாங்க?”என்று குழப்பத்தில் தன் அறையை சுற்றிச் பார்த்துக்கொண்டே இருந்தான் அரவிந்த்.

அவன் படுக்கை மேல் அமர்ந்திருந்த அந்த பொம்மை உணர்வில்லாத சிரிப்பை காட்டியபடியே இருந்தது.



**அத்தியாயம் - 2**

**குழப்பங்கள் ஆரம்பம்**

அன்று இரவு நேரம். அரவிந்துக்கு மறுநாள் முழு ஆண்டுத்தேர்வு இருந்தது. அதனால் அவன் தன் அறையில் படித்துக் கொண்டிருந்தான். அருகிலே அந்த பொம்மை இருந்தது. ஏனென்றால் அவன் இப்போதெல்லாம் அந்த பொம்மை தோழியுடன் தான் நிம்மதியாக இருக்கின்றான்.

“அரவிந்த் உன்னோட ஹால் டிக்கெட்டை பத்திரமா உன் பையில வை! நாளைக்கு மறந்திட்டு போய்ட போற” என்றார் தேவி.

“வச்சுகிறேன் அம்மா..”என்றான் அரவிந்த். ஆனால் அவன் தற்போது கணக்கு பாடத்தில் தீவிரமாக இருந்தான்.

“கருக் ! முருக்!” என்று ஏதோ சத்தம் கேட்டது. அது ஒரு ஒரு சாக்குலேட் கவரின் சத்தம். அரவிந்த் மெல்ல எழுந்து தன் அறைக்கு வெளிய எட்டிப் பார்த்தான். குளிர் பெட்டியில்ருந்து அரவிந்தின் சாக்குலேட்களை திருட்டுத்தனமாக சாப்பிட்டுக் கொண்டிருந்தான் சஞ்சய்.

“அம்மா ! இந்த குட்டி பிசாசு என்னோட சாக்குலேட்கள தின்னுடான்.”என்று கோவத்தோடு சஞ்சை பிடிக்க ஓடினான் அரவிந்த். அதற்குள் சஞ்சய் அலறியடித்துக் கொண்டு அவனுடைய அறைக்கு சென்று கதவை மூடிக் கொண்டான். அரவிந்துக்கு கோவத்தில் கண்ணீரே வந்துவிட்டது. சத்தம் கேட்டு அங்கே அவசரமாக வந்தார் தேவி.

“அரவிந்த் விடுப்பபா. சாக்குலேட் தான? உனக்கு நாளைக்கு வாங்கி தரேன்” என்று சமாதானப் படுத்தினார். தேவி.

“அது எனக்கு பிடிச்ச சாக்குலேட். நாளைக்கு எக்ஸாம் முடிஞ்சு பஸ்ல வரும்போது சாப்பிட்டுகிட்டே வரலாம்னு நினைச்சேன்.”என்று அரவிந்த் ஏக்கத்தோடு சொன்னான். அவன் கண்ணீர் நிற்கவில்லை.

“விடுப்பா. அவன் தம்பிதானே?..விட்டுக்குடுக்கலாம்ல?”என்று தேவி அரவிந்த் கன்னத்தை தொட வர அவரின் கையை தட்டி விட்டான் அரவிந்த்.

“எப்பவுமே நான்தான் விட்டுக் குடுக்கணுமா?” என்று அரவிந்த் கோவமாக தன் அறைக்கு சென்று தாழ்பாள் போட்டுக்கொண்டான்.

மறுநாள் காலை பள்ளிக்கு வேகவேகமாக கிளம்பினான் அரவிந்த். வழியில் சஞ்சய் தன் சாக்குலேட்களை தின்று போட்ட கவர்களை கண்டான். அரவிந்துக்கு கோவம் குறையவில்லை.

“ஹேற அரவிந்த் ! பாலாவது குடிச்சுட்டு போடா..”என்று அவன் அம்மா தேவி எவ்வளவோ கத்தியும் காதில் வாங்காமல் விட்டாய் விட்டு பள்ளிக்கு கிளம்பினான் அரவிந்த்.

தன் பள்ளிப் பேருந்து வந்ததும் அதில் ஏறி பள்ளிக்கு சென்றான். தேர்வு நேரம் ஆரம்பிக்க சில நிமிடங்களே இருந்தது. மாணவர்கள் அனைவரும் பள்ளி வளாகத்தில் ஆங்காங்கே கையில் புத்தகத்துடன் நின்றுக்கொண்டு படிக்க ஆரம்பித்தனர்.

“ட்ட்ரீங்” என்று பள்ளி மணியடித்தது. மாணவர்கள் தேர்வு அறைக்கு செல்ல ஆரம்பித்தனர். தேர்வு அறைக்கு வெளியே நின்றிருந்த அரவிந்த் தன்னுடைய ஹால் டிக்கெட்டை எடுக்க பையை திறந்தான். அரவிந்த் அதிர்ந்து போனான். ஹால் டிக்கெட்டை வீட்டிலேயே மறந்து வைத்தாது அப்போதுதான் அவனுக்கு நியாபகம் வந்தது.

அரவிந்துக்கு பயத்தில் உடன் நடுங்க ஆரம்பித்தது. மற்ற மாணவர்கள் அரவிந்த் தயங்கியபடி அறைக்கு வெளியே நிற்பதின் காரணம் புரியவில்லை.

## அவள்

அனில் ராஜ்

கரையில் விழுந்த மீன் போல்

துடிக்கின்றேன்

அவள் காதல் எனும் இதயகூட்டில் நான்

காத்துக்கொண்டிருக்கிறேன்....

அவள் பார்வை எனும் அலை

அடித்து செல்லுமென....

தேர்வு ஆரம்பிக்க இன்னும் 2 நிமிடங்களே உள்ளன. உள்ளே கண்டிப்பாக அனுமதி கிடையாது என்று தெரிந்தும் தேர்வரயின் ஆசியர் கண்ணில் படும்படி நின்றான் அரவிந்த். ஆசிரியர் அவனை நோக்கி வந்தார்.

“என்னப்பா ஏன் வெளியே நிக்கிற?” என்று கேட்டார் ஆசிரியர்.

இதயம் படபடப்பாக இருந்த அரவிந்த்க்கு பேச வாய் வரவில்லை. இருந்தாலும் சொல்லிவிட வேண்டுமென்று சொல்ல முன் வந்தான்.

“அரவிந்த்!” என்று ஒரு குரல் அவனை கூப்பிட உடனே திரும்பி யாரென்று பார்த்தான் அரவிந்த். பள்ளியின் காவலாளி அவனை நோக்கி வந்தார்.

“இந்தாப்பா உன்னோட ஹால் டிக்கெட்! என் டேபிள்ள கிடந்தது. உங்க அம்மா தான் கொண்டு வந்து வச்சிருப்பாங்கன்னு நினைக்கிறன்!” என்று காவலாளி அரவிந்தின் ஹால் டிக்கெட்டை அவனிடம் குடுத்தார்.

உயிர் போய் வந்தது போல இருந்தது அரவிந்துக்கு.

““ஓ ! அதான் வெளிய நின்னுகிட்டு இருந்தியா? சரி சரி. சீக்கிரம் போய் எக்ஸாம் எழுத ஆரம்பி!” என்றார் ஆசிரியர்.

“ரொம்ப தேங்க்ஸ் வாட்ச் மேன்!” என்று புன்னகையுடன் தேர்வறைக்கு சென்று தேர்வு எழுத ஆரம்பித்தான் அரவிந்த். பிறகு தேர்வை வெற்றிகரமாக முடித்து விட்ட அரவிந்த் மதியம் பள்ளி பேருந்தில் விடு திரும்பிக் கொண்டிருந்தான். அப்போது அரவிந்த் தன்னுடைய சாக்குலேடின் நியாபகம் வந்தது.

பள்ளி பேருந்தின் சிறைய அதிர்வில் அரவிந்தின் பையில் கரகரவென சத்தம் கேட்டது. உடனே தன்

## தாயுமானவன்

pvlkanthan

தாலாட்டு பாடி கண்ணே
உன்னை தூங்க வைத்தால்
நீ தூங்காமல் என்னையும்
தாயாக்கி பார்க்கிறாயே?

தாயாகி நானும்
தாலாட்டிசை இசைக்கிறேன்!
சேயாகி உன்னுடன் சேர்ந்திருக்கிறேன்!
தாயவளும் இங்கிலலை யென்று
தாளாமல் நீயும் ஏங்குகிறாயோ?

தளராதே பொன் மானே!
விடியல் வெகுதூரமில்லை விண்மீனே!
விளையாடி பார்த்தது விதி தானே!
வினையை முறிக்குது மதிதானே!

பெற்றவளை தேடித்தேடி கண்ணே
உன் விழிகளும் கலங்கித்தான் போனதோ?
பெற்றவன் நானும்
மனதிற்குள் அழுது கொண்டனே!
புன் சிரிப்பாலுன்னை தேற்றுகின்றேனே!

பூவாகி என் தோள்மீது
சாய்ந்து கொள்ளம்மா!
தாயவளும் வருவாளம்மா
தாளாத துயரத்தையும் தீர்ப்பாளம்மா!

சின்னஞ் சிறு கிளியே
கண்ணுறங்கம்மா கண்ணுறங்கு!!!

பையை திறந்து ஆராய்ந்தான் அரவிந்த். அவன் பையில் அவனுக்கு பிடித்த அந்த சாக்குலேட்கள் இருந்தன. அரவிந்துக்கு ஒரே சந்தோஷம்தான். தன் தம்பி தன் உணர்வை புரிந்து இந்த காரியத்தை செய்திருகின்றான் என்று எண்ணி மனம் குளிர்ந்த அரவிந்த் சாக்குலேட்களை சுவைக்க ஆரம்பித்தான்.

பள்ளி பேருந்திலிருந்து வீடு வந்து சேர்ந்தான் அரவிந்த். வாசலில் சஞ்சய் தேம்பி அழுதுக் கொண்டிருக்க அவன் அம்மா தேவி அவனை சமாதானப் படுத்திக் கொண்டிருப்பதை கண்டான் அரவிந்த்.

“என்னமா ஆச்சு?” என்று கேட்டான். அரவிந்த். “சஞ்சயோட உண்டியல் உடிஞ்சுப்ப் போச்சாம் அதான் அழுதுக் கிட்டு இருக்கான்.”என்று தலையில்

கை வைத்தபடி கூறினார் தேவி.

"சஞ்சய் உனக்கு என்னோட உண்டியல் தரேண்டா!"என்றான் அரவிந்த்.

"வேணாம் போடா !"என்றான் சஞ்சய் அழுதபடி.

"நீ எனக்காக சாக்குடேட்லாம் வாங்கி பையில வச்சிருந்தியே..நான் உனக்கு உண்டியல் தரக்கூடாதா?"என்றான் அரவிந்த் சிரித்தபடி.

"போடா லூசு! எனக்கு சாக்குலேட் வாங்கிகவே காசில்லை உனக்கு எவண்டா வாங்கி வாங்கித் தருவான்" என்றான் தேம்பியபடி சஞ்சய்.

"அப்போ நீ வாங்கி வைக்கலயா? அம்மா நீங்க வச்சீங்களா?"என்றான் குழம்பிய படி அரவிந்த்.

"காலைல வீடு முடிச்சிட்டு உன் சித்தி வீட்டுக்கு சஞ்சயோட போயிட்டு இப்பதான் வந்தேன்.உனக்கு சாக்குலேட் வாங்க எனக்கு ஏது நேரம்?"என்றார் தேவி.

"என்ன சொல்றீங்க? அப்போ நீங்க என் ஸ்கூலுக்கு வரவே இல்லையா?" என்றான் அரவிந்த் அதிர்ச்சியாக.

"உனக்கு நெறைய கற்பனை சக்தி ஜாஸ்தி ஆயிடுச்சு போல..போய் முகத்தை அலம்பிட்டு வா "என்று சிரித்தபடி கூறினார் தேவி.

மீண்டும் ஒரு குழப்பத்தில் சிக்கினான் அரவிந்த்.

தொடரும்

## மாமனுக்கு ஒரு பாட்டு...

பூங்கோதை

மாமன் உந்தன் பாட்டு கேட்டு
மனசு நொந்து தவிச்சிருக்கேன்
ஏமஞ்சாம நேரத்தில
எழுந்திருந்து தவிச்சிருக்கேன்

பாசம் வைச்ச மாமன் உன்ன
பரிதவிக்க விட்டேனே
மோசக்காரி ஆனேனே- தலைய
மோதி அழத் தோணுதையா

சாதிசனம் புரிஞ்சுக்கல
சாமி என்னைத் தெரிஞ்சுக்கல
ஊதி விட்ட உசிருக்குள்ள
உன் முகம் தான் நிறைஞ்சிருக்கு

சத்தியமா மனசுக்குள்ள
சாமியாட்டம் நீயிருக்க
சாக மனசு கேட்கலையே
சோகமாகிக் கெடக்கிறேனே

சிறுகச் சிறுக உன்காதல்
சித்தெறும்பா சேமிச்சேனே
சிறுக்கி இவ உன் நெனப்ப
சிலைபோல செதுக்கி வைச்சேன்

தேங்கி நின்ற பாசம் தனை
கோடை வெயில் குடிச்சிருச்சே
தேம்பியழும் கார்முகிலும்
தூர தேசம் போயிருச்சே

மாமன் உன் நெனப்பால
மனசெல்லாம் வரண்டிருச்சே
சாமக்கோழி கூவிருச்சே
சாய்ஞ்சு இன்னும் தூங்கலயே



சீமத்தொர போல உன்ன
சீராட்டி வளர்த்தவக
சிரம் கவுந்து நடக்க வைக்க
சித்தமெனக்கு தோணலயே

பாசக்கார மாமன் உன்ன
பெத்தவங்க கவுரவத்த
பாழ்படுத்த விரும்பலயே
பாவிமக தவிக்கிறேனே

இஞ்சிச்செடி நட்டு வைக்க
மஞ்சக் கெழங்கு விளையலாமா
வஞ்சி இவ கரம்பிடிச்சு
வஞ்சவிதி மாற்றலாமோ

சேர்த்து வைக்கும் ஒலகமில்ல
சேர்ந்து வாழ விதியுமில்ல
ஜென்மம் ஒண்ணு மீண்டும் வந்தா
சேர்ந்திடுவேன் மாமன் உன்ன

# வா மச்சான் வா!

கனிகீஸ்



வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்
வாழ்க்கைல கஷ்டம் வந்தா முயன்று ஜெயிக்கலாம்
மண்ணுலதான் பிறந்துவிட்டோம் மனுஷப்பிறவியா
இன்பங்கள தள்ளி வச்சு எதுக்கு வாழணும் துறவியா
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

நீ ஆசப்பட்ட வாழ்க்க அமையலைன்னு
வருத்தப்படாத
தினம் அத நினச்சு துன்பப்பட்டு துரும்பிடிக்காத
வந்ததெல்லாம் ஏத்துக்க விட்டுப்போனா விலகிக்க
இன்பதுன்பம் அத்தனையும் சரிசமமா நீ ஏத்துக்க
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

சொத்து சுகம் சேர்த்திருந்தா சொந்தமெல்லாம் கூட
வரும்
வெட்டிப்பயலா நீ இருந்தா வேதன தான் மிச்சம்
வரும்
தினத்திற்கு செலவு பண்ண அளவா நீ காசு
சேர்த்திடு
அன்போடு உறவாட அளவில்லா நீ நட்பு சேர்த்திடு
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

கூடவே இருந்திடுவாங்க குத்தம் சொல்லி
பிரிஞ்சிடுவாங்க
நாடக மேடையடா வாழ்க்க தினம் நல்லா
நடிக்கத்தெரிஞ்சவனுக்கு ஏகப்பட்ட சேர்க்கை
எதையும் நீ லேசா எடுத்துக்க எவ பிரிஞ்சாலும் நீ
தூசா நெனச்சுக்க
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

நல்லவனா நீ இருந்தா நம்பினதும் ஏமாத்தும்
கெட்டவனா நீ இருந்தா விரும்பி வந்து ஏமாறும்
புத்தி மட்டும் இல்லையினா புத்தகப்படிப்பும் வீணடா
புத்தியுள்ள மனுசனுக்கு பூமிப்பந்தும் சிறுவீட்டா
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

பட்டப்படிப்பு படிச்சபோது வேலையில்லா
திண்டாட்டம்
பாதிபேரு உழைக்கிறாங்க இராப்பகலா மாடாட்டம்
வாங்குற சம்பளம்தான் குறிக்கோளு லட்சியமில்ல
விருப்பப்பட்ட வேல செய்ய யாருக்கும் விதியுமில்ல
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

தலைக்கு மேல வெள்ளம் போனா சாண் என்ன
முழமென்ன
தடிக்கு விழுந்த பின்னால உனக்கு தன்மானம் தான்
என்ன
கண்ட தோல்வி நிரந்திரமில்ல நீ நிலைகுலைந்திருக்க
வெற்றி கண்டாலே விரட்டிடலாம் அதனையும்
மெல்ல
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்
வாழும் போதே இன்பமெல்லாம் அள்ளிப்பருகலாம்
போனதெல்லாம் போகட்டும் நீ புதுசா பிறந்திடு
தினம்தினம் உனக்காய் வாழ்ந்து பார்த்திடு
வா மச்சான் வா வாழ்ந்து பார்க்கலாம்!

♥ ♥ ♥

# வெண் நிலவுகள்

- பசுந்தரா சசி -

"பிச்சை எடுக்கிறதுக்காகவே பிள்ளையை பெறுவது , பிறகு - பேத்தி ,பேத்தி - எண்டு சொல்லித்திரியிறது 'பேத்தியின்ர அப்பாவும் நான் தான் ! 'எண்டு சொல் வேண்டியது தானே..." என எரிந்து கொண்டு பெருமாள் கோயில் படி ஏறினார் ஒரு நடுத்தர வயது பெண் – அந்த பிச்சைக்காற முதியவருக்கு இது ஒன்றும் புதிதில்லை . சேற்றில் தோய்த்தெடுத்த கோலத்தில் இருந்தாலும் பார்ப்பதற்கு அழகான சிலை போல் ஒரு கையில் பிள்ளையும் மறு கையில் பிச்சைத்தட்டும் ஏந்திய படி இருக்கும் மகளையும் , மனம் கல்லாகி மரத்துப் போய் எதற்கும் பதிலோ இல்லை கேள்வியோ கேட்காத அவரையும் இப்படி ஊரார் எள்ளி நகை யாடுவது இன்று நேற்று அல்ல இரண்டு வருடத்திற்கு மேலாக நடக்கிறது . 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையை கொழுத்துவோம் ' என்ற பாரதியின் கூற்றுக்கு 'மாதர் தம்மை (தாமே ) இழிவு செய்யும் மடமையைகொழுத்துவோம் ' . என்ற எழுத்தாளர் ஜெயகாந்தனின் விபரிப்பை எண்ணி மனதில் நகைத்தபடி . தாடியை தடவிக் கொண்டு அனேகமாக காதலிக்காக காத்திருந்த அந்த இளைஞனை நோக்கி நடந்தார் பேச்சு வேண்டிய பிச்சைக்காற முதியவர் .

யாழ் மாநகரிலே பிரசித்திவாய்ந்த கோயில்களில் பெருமாள் கோயிலும் ஒன்று . அழகான சுற்றுசூழலில் இருக்கும் இந்த கோயிலில் தினமும் பூசைகள் தவறாது நடைபெறும் . இவ் ஆலயம் அதிக பக்தர்கள் சூழும் இடம் என்பதால் காதலர்கள் முதல் வியாபார நிலையங்கள் வரை ஏன் பிச்சைக்காறர்களுக்கு கூட பஞ்சமில்லை .

எதையுமே கண்டு கொள்ளாமல் அவனது காணாக் காதலி மோகனா ' எப்ப வருவாள் ? , நேரில் எப்படி இருப்பாள் ? , என்னை இனம் காணுவாளா.? , கண்டால் நாணுவாளா , இல்லை பிரமிப்பாளா ..? பெரியோரால் திருமணமே நிச்சயிக்கப்பட்டு . இரண்டு வருடம் தொலைபேசியில் மணிக்கணக்கில் பேசிய பின்னும் ஏன் நாண வேண்டும் ! . ஓடி வந்து கட்டிக் கொண்டாலும் தப்பில்லை . - இந்த கோயில் முன்றலிலா ? , முதல் சந்திப்பை வேறு எங்காவது வைத்திருக்கலாமோ.. , பெருமாள் கோயிலில் வைத்தது தப்பாகி விட்டது . ஒரு வேளை அவள் அப்படி நினைத்தாலும் இந்த கூட்டத்தின்முன் எப்படி கட்டிக் கொள்வாள்..? - சீ.. என் கற்பனைக்கு இங்கிதமே இல்லை. ' தலையை குனிந்த படி தன்னை தானே கடிந்து கொண்டான் ஜோன் . ஏறக்குறைய அவன் இவ் உலகில் இல்லை. வெளிநாட்டில் இருந்து திருமணத்திற்காக வந்திருக்கிறான் . மனைவி பற்றிய கற்பனைகள் இருக்காதா என்ன ?.

அவன் முன்னால் ஒரு அழகிய பூங் கொத்து நீண்டது 'மோகனா'என உச்சாடனம் செய்துகொண்டு பிரமிப்போடு நிமிர்ந்தான். முன்னால் ஒரு வயோதிபர் பூச் செண்டுடை நீட்டிய படி நின்றார் . அவர் கையில் பிச்சைப்பாத்திரமும் இருந்தது ஜோன் புரியாமல் விழித்தான் .



அன்பை தந்தேன்
காதலை தந்தாய்
தண்ட வாளத்தில்
காதல் பயணம் ....!!!

காதல் சுவர் நீ
காதல் படம் நான்
தூசி பிடிக்கிறது காதல்

நினைவில் கோலம்
போட்டேன் -கனவில்
புள்ளி போட்டேன்
கண்ணீர் கோலத்தை
அழிக்கிறது ....!!!

கே இனியவன்

" மன்னிக்க வேண்டும் தம்பி ! என்ர பேத்தி உங்கட மோட்டார் வண்டியில் இருந்த பூச் செண்டை இழுத்து விழுத்தி விட்டாள். " என்று பூங்கொத்தை அவனிடம் நீட்டினார் . திரும்பி பார்த்தான் பூவை தவிர மோகனாவுக்காக வாங்கி வந்த மீதிப் பொருட்கள் எல்லாம் இருந்தது.

பின்னால் குழந்தை ஒன்று பலமாக வீரிட்டு அழுது கேட்டது அத்திசையில் திரும்பினான் . " சைலஞ்சர் நல்லா சுட்டுப்போட்டுது " என்றபடி பிள்ளையை மடியில் வைத்து நெற்றியை உரஞ்சிக்கொண்டு இருந்தார் தாய்.

"அதுதான் என்ர பேத்தி , அது மகள். இந்த

பூங்கொத்தை எடுக்க வந்து பூவையும் விழுத்தி , தானும் தடக்கி விழுந்து விட்டது. வண்டியின் சைலென்னர் நெற்றில நல்லா சுட்டு போட்டுது . நானும் மகளும் பிச்சை தட்டை குலுக்கிக் கொண்டு இருந்ததால பிள்ளையை கவனிக்க இல்லை" . என்றார் அந்த பிச்சைக்காற முதியவர் .

"பறவாய் இல்லை ஐயா .. " என்று விட்டு மலரை வேண்டினான். தான் காதலிக்காக வெளிநாட்டில் இருந்து கொண்டு வந்த 'கற்பறி கன்டோஸை 'அவரிடம் கொடுத்து பிள்ளையிடம் கொடுக்கச் சொன்னான்.

அவ் வீதியால் கோயிலுக்கு சென்ற இளைஞர்களில் ஒருவன். பிள்ளையோடு இருந்த அவ் இளம் பிச்சைக்காறியை காட்டி " டேய்.. தொங்கல்ல இருக்கிறத பாத்தியா..? மணித்துண்டு " என்றான் . இன்னொருவன் இந்த முதியவரைப் பார்த்து " தாத்தா கொடுத்து வைச்ச கட்டை !" என்றான்.

ஜோன் முதியவரை பற்றுதல் இன்றி பார்த்தான் . சற்று முன் அவன் காதுகளில் விழுந்து அவன் கிரகிக்காமல் போன அந்த பெண்ணின் தூற்றல் மீண்டும் எதிரொலித்தது . " இந்த வயதிலும் கிழுடுக்கு .. சீ.. கறுமம் , கறுமம் . போயும் போயும் இதுகளை கோயில் வாசல்ல விட்டுக்கிடக்கு ...." .

ஜோன் முகத்தை சுளித்துக்கொண்டு மறு பக்கம் திரும்பி நெற்றியை தடவினான். பிச்சைக்காற முதியவர் புளுப் போல நெளிந்தார் . அவன் கொடுத்த சொக்லேட் கையில் இருந்து நழுவியது. பேத்தியை கூப்பிட்டு அதை கொடுத்து விட்டு .

"தம்பி உம்மை பார்த்தால் நல்ல பிள்ளை மாதிரி தெரியுது . யாருக்கும் சொல்லத்தேவை இல்லை என்று விட்டதை ஏனோ என் மனம் உமக்கு சொல்ல வேண்ணும் எண்டு நினைக்குது . நான் உண்மையை சொல்லிப் போடுறன் தம்பி ! இவையள் சொல்லுறது உண்மை தான் ; அது என்ர மகளும் இல்லை , இது என்ர பேத்தியும் இல்லை . இரண்டும் என்னை காப்பாற்றும் கடவுள் ! " என்று கண்ணீர் உருகினார்.

' பின்பு ஏன் பேத்தி என்று பொய் சொல்ல வேண்டும் ? ' என எண்ணிக்கொண்டு முதியவரை மேலும் கீழும் பார்த்தான் ஜோன் . முதியவர் தொடர்ந்தார்.

"அவளை நான் முதன் முதலாக பார்த்தது ஒரு வெள்ளிக்கிழமை ."

" பாரு.. பாருகுட்டி ... அடி பார்கவி ! நான் மினக்கட்டு கதை சொல்லுவன் நீ என்னடா எண்டால் நித்திரை கொள்ளுறியா..? " என்ற படி கதையை நிறுத்தி விட்டு மடியில் நித்திரை கொண்ட மகளை உலுப்பினான் இந்திரன் . அவளோ மடியில் கிடந்த படி யன்னல் ஊடாக நட்சத்திரங்கள் ஊடே கதையின் பாத்திரங்களை மனக்கண்ணில் உலாவ விட்டிருந்தாள் . தந்தை கதையை நிறுத்தியும் அவள்

சிரிஷ்டித்த பாத்திரங்கள் திரையில் நின்றும் மறையாமல் நீண்டு கொண்டு போயின . அந்த இளம் பிச்சைக்காறியின் தட்டில் கிடந்த வெள்ளிக்காசுகளாய் வான் வெள்ளிகள் மின்னின - திடீரென திடுக்கிட்டவளாய் .

## மன்னித்து விடு

திவ்யா ஸ்ரீநிவாசன்

நான் உருவாக,
உனது உயிரில்
பாதி பகிர்ந்தேன்..
நான் சுயநலவாதி,
என்னை,
மன்னித்து விடு!

பூமியில்,
பாதம் பதிக்க,
உனக்கு,
வலி கொடுத்தேன்..
நான் சுயநலவாதி,
என்னை,
மன்னித்து விடு!

உனது
இரத்தத்தை உணவாக,
பருகினேன்..
நான் சுயநலவாதி,
என்னை,
மன்னித்து விடு!

எனது
வாழ்க்கையை,
நானே தேடிக்
கொண்டேன்..
நான் சுயநலவாதி,
என்னை,
மன்னித்து விடு..

உனது
பாசத்தை
விற்றேன்,
முதியோர்
இல்லத்திற்கு..
நான்,
மிகவும் சுயநலவாதி,
என்னை,
மன்னித்து விடு!

அம்மா, என்னை,
மன்னித்து விடு!

"அப்பா ஏன் கதையை நிப்பாட்டிப்போட்டீங்கள்." என்றாள். "உனக்கு நாளைக்கு பள்ளிக்கூடம் நேரத்திற்கு சாப்பிட்டு விட்டு படுக்க வேண்டும்" என்றான் இந்திரன் . " சனிக் கிழமையில யாரப்பா பள்ளிக்கூடம் வைக்கிறது" என்று விட்டு சிரித்தாள். ஆறே வயதான மகள் பார்கவி.

"சரி சரி சாப்பிட்டாப்பிறகு மிச்சத்தை செல்லுறன்" என்றான் .

"அப்பா.. அந்த இளம் பெண் எப்படி இளம் பிச்சைக்காறி ஆனாள் ? அதை இன்னும் நீங்கள் சொல்லவே இல்லை ! " என்றபடி தந்தையின் நாடியை பிடித்து அங்கும் இங்கும் ஆட்டினாள். இருவரும் மாடியால் இறங்கி கீழே வந்தார்கள்.

" இண்டைக்கு இங்க லண்டன் - M 25 - ரோட்டில விபத்தாம் தம்பி கேள்விப்பட்டனியளோ.. ? " என்றபடி தொலைக்காட்சியை நிறுத்தி விட்டு எழும்பி சமையல் கட்டை நோக்கி வந்தார் இந்திரனின் மனைவி நிலானியின் தந்தை யோசப்பர் . "ஓம் மாமா அதுதான் நானும் வேலையால வர சுணங்கியது அண்டகிறவுண்ட ரெயின் எண்டால் கெதியா வந்திருக்கலாம் கார் எண்டதால பெரிய கஸ்டமாப் போச்சு"என்றான். கத்தரிக்காய் கறி வாசனை மூக்கோடு சேர்த்து அவனையும் இழுத்தது .

சமையல்கட்டுக்குள் நுழைந்தான்- நிலானி பொரித்து காச்சிய கத்தரிக்காய் குளம்பை அடுப்பை விட்டு இறக்கிக் கொண்டு இருந்தாள்.

" தம்பி எழும்பீற்றானா என்று ஒருக்கா பாரம்மா.. " என்றாள் நிலனி மகள் பார்கவியிடம் .

கத்தரிக்காய் கறியை பார்த்துக்கொண்டு " தக்காளிக் கறி எப்படி சமைத்தாள் ..? இப்படி ஆளை மயக்குது.. " . என்றபடி நிலானியை நெருங்கினான் இந்திரன். " தக்காள் - இக்கறி - சமைத்த முறை எல்லாம் இருக்கட்டும். தக்காள் - தகாதவள் ஆகமுதல் உடுப்பை மாத்துங்கோ.. நாளைக்கும் இதைத்தான் வேலைக்கு போட வேணும் ; கறி மணக்கப்போகுது . தமிழ் பள்ளிக்கூடத்தில கொஞ்சம் வேலை இருந்ததால வீட்ட வர நேரமாகிப்போட்டுது நாளைக்குத்தான் உடுப்பு தோய்க்க வேண்டும் . " என்றபடி அகப்பைக் காம்போடு திரும்பினாள் நிலானி.

✡ ✡ ✡

- 2 -

வெளியில் மழை சிலு சிலு வென சிணுங்கிக் கொண்டு இருந்தது. " ஐரோப்பாவில் இது பனிக்காலம் என்றாலும், இந்த மழைக்கு காலமே இல்லை வருடம் பூராகவும் இப்படித்தான் வடிக்கிறது " என அலுத்துக் கொண்டு இரா போசனத்தை முடித்து மாடியில் உள்ள தன் படுக்கை அறைக்கு சென்றார் இந்திரனின் மாமா. மறு அறையில் தாய்க்கும் தம்பிக்கும் இடையில் கிடந்தபடி

" அப்பா விட்ட குறையில இருந்து கதையை சொல்லுங்கோ... " என்று அடம் பிடித்துக்கொண்டு அழுதாள் பார்கவி .

"சரி சரி.. எங்க விட்டனான்."
" அந்த பிச்சக்காற ஐயா முதல் முதலா இளம் பிச்சக்காறியை எப்ப பாத்தார்.. என்ற இடத்தில "

## வானவில் தொடுத்த போர் !

கல்பனா பாரதி

வளைந்திருப்பதன் மாயம் என்னவோ
வண்ணமிகு வானவில்லே ?
என்று கேட்டேன்
மாயம் என்ன மாயம் ?
வண்ணங்கள் ஒருங்கிணைந்து
நீலவானத்திற்கு எதிராக
ஒரு விற்போர் என்று சொன்னது.
எண்ணங்களை புத்தகத்தில் குவித்துவைத்து
உறங்கிக் கிடக்கும் மனிதா !
எழுவது எப்போது ?
எதிர்த்துப் போரிடப் போது எப்போது ?
என்றும் சொல்லிச் சென்றது.

அந்த பிச்சிக்கார முதியவர் ஜோனிடம் சொன்னார் .

" அது ஒரு வெள்ளிக்கிழமை மாலைப் பொழுது . 2009 சித்திரை முதல் பகுதி , கிளிநொச்சியின் கரையோர புதுமாத்தலன் கிராமம் - நாலா புறமும் புகையும் , வெடிச்சத்தமும் , ஓலக் குரலும் , பிஞ்சு போன அங்கங்களும் , பெரு வாரியான பிரேதக் குவியல்களுமாய் இருந்தது . விளக்கில் விழுந்து சாகும் விட்டில் பூச்சிகள் போல மக்கள் பாதுகாப்பு என ஓடிய இடமெல்லாம் படு குளிகள் ஒளித்திருந்தன . தணலில் விழுந்த நண்டு தாவி அணைச்சதெல்லாம் நெருப்புக் கட்டிகள் என்பது போல் ஒதுங்கிய இடமெல்லாம் குண்டுகள் இருந்தது . நான் - செல் விழுந்து இறந்த என் மனைவி கற்பகமேரியின் கால்களை பிடித்தபடி கதறிக் கொண்டு இருந்தேன். அவ் வழியால் ஓடிய சனம் எல்லாம் ' இந்த கிழவன் இதில இருந்து அழுது சாகப்போகுது 'என என்னை திட்டியது . நான் காதில் போட்டுக்கொள்ள வில்லை . எனக்கு பின்னால் - இறந்த தாயின் மார்பை முட்டியபடி ஒரு குழந்தை - அழுது கொண்டு கிடந்தது . எங்கள் பக்கமாக ஓடி வந்த ஒரு பெண் அந்த குழந்தையை கையில் எடுத்தபடி என்னிடம் " இதில இருந்தால் நீங்களும் சாக வேண்டியது தான் எழும்பி வாங்கோ " என்றாள். "

நான் மாட்டேன் என் மனைவியோடு நானும் போறன் இனி எனக்கு யார் இருக்கு " என அழுதேன் . "

அப்பா.. ! பிச்சை எடுத்தெண்டாலும் நான் உங்களுக்கு கஞ்சி ஊத்துறன் எழும்பி என்னோட

வாங்கோ.." என்ற அவள் வேறு யாருமல்ல - அதோ பிச்சையே எடுத்துக்கொண்டு இருக்ககும் அந்த பெருமாள் கோயில் இளம் பிச்சக்காறி தான் ' என கண்ணீர் வடித்தார் .

காய்ந்து வெடித்த தரையில் பாச்சிய நீர் போல அழுக்கேறிய அவரின் கன்னதோலில் கண்ணீர் உருண்டோடி நரைத்த தாடியை நனைத்து வடிந்தது . ' என்ர ஒரே ஒரு பிள்ளையும் சுனாமியில போயிற்றான் . அவள் எப்ப என்னை அப்பா..! என்றாளோ.. அப்பவே அவள் என் மகள் ஆகி விட்டாள் . இங்கால வந்து என்னை தன் அப்பா என்றும் , குழந்தையை தன் மகள் என்றும் , கணவன் செல்லடியில் செத்தப் போயிற்றார் என்றும் பதிவு செய்தாள்.

இரண்டு வருசமா செட்டிகுளம் கதிர்காமர் முகாமில இருந்தோம் . பிறகு மீள் குடியேற்றம் எண்டு மாங்குளத்தில கொண்டு வந்து ஒரு காட்டுக்குள்ள இறக்கிப் போட்டுப் போயிற்றாங்கள் . நான் கடல் தெழில் செய்யிறனான். வீடு வளவு , காணி ஒண்டும் இல்லை . அவளோ செஞ்சோலையில இருந்து வளர்ந்த பிள்ளை உறவினர் யாருமே இல்லை. குழந்தைக்கு எங்கள் இருவரையும் தவிர யாரும் இல்லை . வீடு வீடா ,கடை கடையா , வேலை கேட்டு திரிஞ்சம் . எனக்கு வேலை இல்லை என்று விட்டு அவளின் மேலைப் பார்த்து ' வேலை தரலாம் பின்னேரம் வீட்ட வா..' என்றார்கள் . போனால் வேலையை மறந்து விட்டு சேலையை பிடித்தார்கள். உதறி விட்டு வந்துவிட்டாள் .

அரை வயிறு கால் வயிரோட கிடந்தோம். வாழ வளி இல்லை . யாரோ ஒருவர் யாழ்ப்பாணம் கோயில்ல கஞ்சி ஊத்துறார்கள் என்றார் . இங்கு வந்தால் வெள்ளிக்கிழமையில மட்டும் தான் ஏதாவது எங்காவது கொடுக்கிறார்கள். பசியால் பிள்ளை வதங்கியது அதன் முகத்தை பார்க்கவே முடியவில்லை . பிள்ளையின் பசிக்காக நான் கை நீட்டினேன் , எனக்காக அவள் கை நீட்டினாள் , எங்கள் இருவருக்குமாக பிள்ளை கை நீட்டியது - இதோ இன்று பிரபல்யமான பெருமாள் கோயில் பிச்சைக்காரர்கள் ஆகிவிட்டோம்.

'பிள்ளை வரம் வேண்டும் என்று தவம் கிடக்கும் பல தாய்களுக்கு மத்தியில் எத்தனை பிள்ளைகள் ஒரு தாய் வேண்டும் என ஏங்கி நிற்கிறார்கள் ' என்று தன்னையே தாயாக்கிக் கொண்டு வாழும் அந்த தெய்வ விக்கிரகத்திற்கு எத்தனை இழிசொல் ! , எத்தனை வசைகள் ! . தம்பி.. உங்களை கை எடுத்து கும்பிடுறன் ஏதாவது ஒரு தொழில் செய்து பிழைக்க எங்களுக்கு ஒரு வளி காட்டுங்கோ... " என கண் கலங்கினார் முதியவர்.

அதற்குள் ஜோனின் கை தொலைபேசி சிணுங்கியது , எடுத்தான் அவன் காதலி மோகனா. " கலோ.. , கலோ.. , நான் ஜோன் கதைக்கிறன்.''

கே இனியவன்

என் இதயத்தில் நீ போட்ட அழகு
கோலம் தான் என் இதய நரம்புகள்
அழித்து விடாதே இறந்து விடுவேன்

◆ ◆ ◆

தூண்டில் கண்ணால் தூண்டில் போடுகிறாய்
துடித்து போகும் மீனாய் தவிக்கிறேன்
பாவம் காதல் மண்புழுவாய் இறக்கிறது

" ஜோன் நான் உங்களை பார்க்க வாறது அம்மாவுக்கு தெரிஞ்சு போச்சு . கலியாணத்திற்கு முதல் தனிய உங்களோட வெளிய போக வேண்டாம் எண்டு சோல்லிப் போட்டா ! நாளைக்கு இதே நேரம் எப்படியும் கோயிலுக்கு வருவன் , நாம் ஒருவரை ஒருவர் முதல் முதல் கோயில்ல தான் பார்க்க வேண்டும் . நீங்கள் திரும்பி விடுதிக்கு போங்கோ இரவு போன் பண்ணுறன். '' என்று விட்டு வைத்தாள் மோகனா .

இன்னும் அந்த முதியவர் அவன் முன்னாலே நின்றார். " ஐயா ஒன்றுக்கும் யோசிக்காதேங்கோ , எனக்கு தெரிஞ்ச ஒரு ஆள் கனடா கோயில் ஒன்றில தலைவரா இருக்கிறார் . அவை இங்க உள்ள பல கைவிடப்பட்ட ஆட்களை பராமரிக்கினம் , உங்கிட பெயர் விபரத்தை தாங்கோ , நான் அவரோட கதைச்சுப் போட்டு உங்களுக்கு சொல்லுறன்." என்று விட்டு தானே விபரத்தை எழுதி வேண்டினான். மெதுவாக மழை தூற ஆரம்பித்தது. " சரி ஐயா நான் கொஞ்ச நாளைக்கு இங்க தான் நிப்பன் பிறகு உங்களை பார்க்கிறேன் " என்று விட்டு கிழம்பினான்.

✡ ✡ ✡

- 3 -

மறுநாள் அதே இடத்தில் அவனின் எதிர்கால மனைவிக்காக வந்து நின்றான் . இன்று - நேன்றை விட பொலிவாக இருந்தான் . உள்ளத்தில் ஒரு அழகிய உணர்வும் கண்ணில் எதிர்பார்ப்புமாக அந்தரத்தில் நின்றான். படத்தில் பார்த்தவளை நேரில் பார்க்கப்போகிறோம் - என்ற பதைப்பு அவன் கால்களிலும் தெரிந்தது . அவனுக்கு இடப்பக்கமாக ஆட்டோ ஒன்று வந்து நின்றது . அதிலிருந்து ஒரு சட்டை போட்ட சாமரம் இறங்கி வந்தது .மோகனமாக வந்தவள் தன் மோகனாவா என பார்த்தான் . அவளேதான் வந்தாள் . அவன் மோகனா ! அவள் அருகில் வர முன் அவளின் வாசம் சுவாசத்தில் கலந்து வந்தது ' அடடா ! நல்ல பெண்ணைதான் தெரிவு செய்திருக்கிறார்கள் .

இரண்டு வருடமாய் நம்முடன் இவளா கதைத்தாள்? ' என நினைத்தபடி மெய் மறந்து நின்றான்.

"ஜோன் தானே நீங்கள்.? ."
அவன் சிரித்தவாறே வலிந்து வார்த்தைகளை வரவழைத்துக் கொண்டு
" ஓம் நான் தான் ஜோன் , ஆனால் நான் உங்களை உடனே அடையாளம் கண்டு விட்டேன். " என்றான் .

" கொஞ்சம் தனிய போய் பேசலாமா.? "என்றபடி தேர்முட்டிக்கு அருகில் சென்றாள். அவன் பரிசுப் பொருட்களையும் எடுக்காமல் அவளை பின் தொடர்ந்தான். அவள் சன நடமாட்டம் இல்லாத இடத்திற்கு வந்ததும் .

" இஞ்ச பாருங்கோ ஜோன் . இனியும் நான் உங்களை ஏமாற்ற விரும்ப வில்லை ! நான் ஒருவரை காதலிக்கிறேன் . இனி நீங்கள் எனக்கு போன் பண்ண வேண்டாம் . இத பெரிசு படுத்தினா என்னை ஏமாத்திப்போட்டார் என்று சொல்லுவன் . பிறகு யாரும் உங்களுக்கு பொண்ணு தர மாட்டார்கள் . இதை இதோட விட்டிருங்கோ " என்று விட்டு பதிலை எதிர்பாராமல் தோளை சிலுப்பிக்கொண்டு அதே ஆட்டோவில் ஏறிப் போய் விட்டாள்.

தேர் சில்லோடு சாய்ந்து இருந்து விட்டான் . அதன் சில்லு அவன் கழுத்திலும் வயிற்றிலும் ஏறி கடந்து போவது போல் இருந்தது . கண்கள் திறந்திருக்க காட்சிகள் இறந்து கிடந்தன . சில கணங்கள் அவன் இல்லாமல் இருந்தான். கட்டெறும்பு ஒன்று பொலிதீன் துகளை தூக்கிக்கொண்டு தேர் சில்லுக்குள் புகுந்தது ." சீ.. " என்று விட்டு எழுந்தான் .

பெருமாள் சன்னிதானத்திற்குள் புகுந்தான். சிம்மை களட்டி எறிந்துவிட்டு போனை பெருமாள் உண்டியலுக்குள் போட்டான். கிணற்று நீரில் அவளோடு பேசிய வாயை கழுவினான். வண்டிக்கு வந்தான்.

வண்டிச் சீற்றில் இருந்த புதிய பூங்கொத்தை எடுத்துச் சென்று முளங்காலில் நின்றபடி "என்னை திருமணம் செய்து கொள்கிறாயா .?" என்று அந்த பிச்சைக்காரியிடம் நீட்டிக் கொண்டு கேட்டான்.

அந்த வரிசையில் இருந்த எல்லா பிச்சைக்காரர்களும் தட்டை கீழே போட்டு விட்டு அவனையே பார்த்தனர் . கோயிலுக்கு வந்தவர்கள் வாயிலுக்கு போகாமல் வாயை பிளந்தபடி நின்றனர் . அவள் - அருகில் இருந்த தந்தையை பார்த்தாள். பின் மடியில் இருந்த பிள்ளையைப் பார்த்து விட்டு மீண்டும் தந்தையை பார்த்தாள்.

" நமது கதை எல்லாம் தம்பிக்கு தெரியும். எனக்கு சம்மதம் இனி உன் விருப்பம் " என்றார் தந்தை .

சுற்றி இருந்தவர்கள். " ஓம் எண்டு சொல்லு




புள்ள.. இப்ப நீ வாழும் வாழ்க்கையை விட எதுவும் கேவலமா இருந்து விடாது " என்றார்கள்.

அவள் தந்தையையே பார்த்துக்கொண்டு இருந்தாள் . அவர் " நீ என்ன முடிவு எடுத்தாலும் அதில் எனக்கு முழு சம்மதம் " என்றார். அவளின் மௌனம் கலைய வில்லை . கண்ணில் இருந்து ஒரு துளி பல காலத்திற்கு பின் கனிந்து தட்டில் கிடந்த வெள்ளிக்காசின் மேல் விழுந்து தெறித்தது.

அருகில் இருந்த கால் இல்லாத அம்மா " தம்பி ! பிள்ளை ஓம் எண்டு சொல்லி போட்டுது நீங்கள் ஆக வேண்டியதை கவனியுங்கோ " என்றார். அவன் பூச் செண்டை நெருங்கி நீட்டினான். அவள் இரு கையாலும் வாங்கி அந்த பூக்களிடையே முகத்தை புதைத்தாள் . என்ன ஆச்சரியம் அவள் முகமும் ஒரு பூவாக மாறியது . பின் பூச் செண்டை மடியில் இருந்த பிள்ளையிடம் கொடுத்தாள். அது அவளை பார்த்து சிரித்ததுக் கொண்டு வேண்டியது .

வீதியில் நின்ற மினி வான் ஒன்றை வாடகைக்கு அமர்த்தி மணப்பெண் , முதியவர் , குழந்தை உட்பட அந்த கோயிலில் இருந்த எல்லா திக்கற்றோரையும் வண்டியில் ஏற்றி தான் தங்கி இருந்த விடுதிக்கு கொண்டு சென்றான். பின் ஒவ்வொருவருக்கும் சுமாரான விலையில் உடுப்பு எடுத்து தந்தான். தான் கொண்டு வந்த திருமண புடவையையும் ஏனைய பரிசுப் பொருட்களையும் அவளிடம் கொடுத்து பதிவுத்திருமணத்திற்கு தயாராகுமாறு கூறினான். யாழ் கச்சேரியில் அந்த முன்னாள் செல்வந்தர்கள் முன்னால் ஆடம்பரமின்றி ஆனால் அழகாக திருமணம் நிறைவேறியது. விருந்து முடிந்த பின் அவளின் சக தொழிலாளிகளை ஆதரவற்றோர் காப்பகத்தில் சேர்த்து விட்டு மனைவி , குழந்தை , முதியவருடன் வீடு சென்றான் .

- சுபம் -

" சரி கதை முடிஞ்சு போச்சு ! தூங்கம்மா " என்றபடி மகளை தூக்கிக் கொண்டு அவளின் அறைக்கு நடந்தான் இந்திரன் . அறையின் வாசலிலேயே " தம்பி என்னிட்ட தாங்கோ நான் தூங்க வைக்கிறேன் என வேண்டிக்கொண்டார் அவனின் மாமா . அவரிடம் கொடுத்து விட்டு கதவை பூட்டிக்கொண்டு திரும்பினான். அவனின் காலை பிடித்துக் கொண்டு அழுதாள் மனைவி நிலானி . "ஏன் என்னத்திற்கு இப்ப அழுறீர் ? உமக்கும் கதை சொல்ல வேணுமோ ? " என்றான் சிரித்தபடி .

" நீங்க மட்டும் அண்டைக்கு பெருமாள் கோயிலுக்கு வந்திருக்காட்டி இப்பவும் எத்தனை நாள் பட்டினியோட , எந்த கோயில் வாசலயோ... தெரியாது " என விம்மி விம்மி அழுதாள். அவளை இரு கையாலும் அள்ளி எடுத்து கன்னத்தில் வழிந்த கண்ணீரை துடைத்துக்கொண்டு

." யோகேந்திரன் எப்படி ஜோன் ஆனேன் தெரியுமா ? " என்றான். அவள் அழுதபடியே இல்லை என்று தலையை ஆட்டினாள்.

" யோகேந்திரத்தின் , இந்திரன் எல்லாம் பழைய பேரா இருக்கு நல்லா இல்லை எண்டு - யோகேந்திரத்தின் - இல் உள்ள கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த நடு -கேந்திர - த்தை வெட்டி சுருக்கி 'யோன் ' எண்டு அந்த ஏமாற்றுக்காறி தான் வைத்தாள் " என்றான் . முதியவர் அவருக்காக கை ஏந்திய பேத்தி பார்கவியின் கையை முத்தமிட்டுவிட்டு சிரிப்பது கேட்டு நிலானியும் சிரித்தாள்.

- முற்றும் -

## வருட வழி(விழை)யும்… மனதின் துளிகள்

சுந்தர் புருஷோத்தமன்

**கண்மான்!**



மங்கையவள் மானன்ன
நீள்விழிகள்
மருளுமன்றோ?
வேங்கையை
என்விழிகள்
கண்டவுடன்,
வேகமாய் மாற்றினேன்
தொலைக்காட்சி அலைவரிசை.

**முத்து நகை(க்கும்)!**



முத்துக்களாயிரம்
கோர்த்தெடுத்து -நான்
அற்புதமென் றன்று
ஆர்ப்பரித்தேன்!
வாய்ச் சிரித்தாளென்
அன்பு மங்கை – அவள்
வாய்ச்சிரிப்பில் கண்ட
நாலெட்டு முத்துக்கள்
நாவினைச் சுழற்றி நகைக்கின்றன!!

**மழை!**



நீ குடைபிடிக்க,
குற்றாலச் சாரலாய்
மழையடிக்க,
மின்னலினூடே
யுன்பிம்பம்!
கொட்டும் மழையில்
தேவதையாய் நீ!
சொட்டச் சொட்ட
நனைகிறதென் நெஞ்சம்!

**தேன்!!**



ஈக்கள் கொட்டின!
கொட்டும் வலியில்
சொட்டும் துளிகளைச்
சேகரித்தேன்!
சேர்த்தத் துளிகளை மாது
சுவைத்தாள்!
சுவைத்துப் பின் சிரித்தாள்!
பருகினேன் விழிகளால் - அவள்
சிரிப்பெனுந்தேன்…நாத்துணையின்றி!

**9.** க்ரோதாகார அங்குசோஜ்வலா

ராகம் - பைரவி

கோபம் கொள்வாய் அம்மா எந்தன்
கொடிய மனம் மீது நீ அங்குசமாம் (கோ)
மனம் குரு சொன்னதை கேட்பதில்லை
மாதா உன்னை எப்போதும் நினைப்பதில்லை (கோ)

ஞானாநந்தத்தை நான் நாடிட வேண்டும் பரி
பூரணமான பதத்தை பெற்றிட வேண்டும்
ஆணவ கன்மங்கள் அழிந்திட வேண்டும் என்
மனம் என்றும் உன்னடி பணிந்திடவேண்டும் (கோ)

குரு சொன்ன வழியில் சென்றிடவும் தாய்
கரு குழிதன்னை கடந்திடவும்
திருவாம் உன்னை தெரிந்திடவும் மன
வருத்தங்கள் மண்ணில் மடிந்திடவும் (கோ)

**10.** மனோருபேக்ஷு கோதண்டா
ராகம் - சாவேரி

மனமே வில்லாய் மாறிவிடு
மங்கள அம்பிகை கையினிலே (ம)
வளைத்த படியெல்லாம் வளைந்து விடு
வகையாம் கரும்பு ருசியுடனே (ம)

ஞானாநந்த சாறு உண்டு அதில்
ஞாலத்தின் சாயை விழுவதுண்டு
காலத்தை கடந்த கழுத்துண்டு அதை
கருத்துடன் கையாள உரமுண்டு (ம)

மாயையாம் அசுர வதம் செய்ய
தாயவள் மனத்தை கை தரித்தாள்
தூயதாய் வைத்தால் தயை புரிவாள் பாபம்
காய்ந்திடநினைத்து அருள் புரிவாள் (ம)

**11.** பஞ்ச தன்மாத்ர ஸாயகா
ராகம் - கானடா

ஐந்தான புலன்களே அன்னை கை மலர்களே
அதை அறிந்தால் உயர்வு மனதிலே (ஐ)
மனமெனும் வில்லுக்கு தொடுத்திடும் பாணம் வேண்டும்
மலர்களே அவை நம் புலன்களே (ஐ)

ஞானாநந்த மணம் அதில் வீசிடுமே உயர்
வானத்தில் வேகமாய் சென்றிடுமே
பாணங்கள் உள்முகம் திரும்பி விட்டால்
பாதாள அசுரபகை அழிந்திடுமே (ஐ)

மனம் சுத்தமானால் மலர் சுத்தமாகும் அவள்
இனம் என்று உணர்ந்தால் இறை சித்தமாகும்
தனமுடன் மூவாசை தான் தீர்ந்து விட்டால்
கனமின்றி மோக்ஷம் தான் ஸித்தமாகும் (ஐ)

**12.** நிஜாருண ப்ரபாபூர மஞ்சத் ப்ரம்மாண்ட மண்டலா
ராகம் - பைரவி

அண்டங்கள் அனைத்துமிங்கே உந்தன் படைப்பு அது
அருணமாய் ஒளிர்வது உந்தன் சிறப்பு (அ)
சிறிது கண்ணை முடினால் சிவப்பான உருவம் அதில்
பெரிதாக தெரிவது பரப்ரம்மம் (அ)

உள்ளே இருப்பதுதான் வெளியேயும் அங்கு
துள்ளிதிரிவதுதான் அங்குஷ்ட மாத்ரம்
வெள்ளை வெளேரென்ற சிவ ருபம் அங்கு
சுள்ளென்று தெரிவதுதான் நிஜ அருணம் (அ)

ஞானாநந்த மிங்கே சிவப்பானது அதை
தானாய் அடைவதுதான் உயர்வானது
ப+ணாய் விளங்குவதே ப்ரம்ம ரந்த்ரம் அதை
பேணிக் காப்பதுதான் யோக வைபவம் (அ)

13. சம்பகாசோக புன்னாக ஸௌகந்தித லசத்கசா
மணம் மிக்க மலர்களை சூடி நின்றாள் வாழ்வு
மணம் வீச மங்களம் அருளிடுவாள் (ம)

சம்பக அசோக புன்னாகம் அவை
சீக்கிரம்; மணம் பெறுவதவ ளாலே (ம)

ஞாலத்தில் பல பல மலருண்டு அதில்
ஞானத்தின் மணமிங்கே எதற்குண்டு ?
ஞானத்தில் மகிழ்;ந்தால் நலமுண்டு அதை
ஞானிக்கு தந்திட அவள் அருளுண்டு (ம)

அருள்சக்தி தந்து ஆட்கொள்வாள் மன
மருள் தன்னை நீக்கிட மனம் தருவாள்
தருவதில் அவளுக்கு நிகரில்லை அன்னை
கருவிலே பிறப்பது அவள் லீலை (ம)

# பில்லா III: பில்லா Vs டிராகுலா

சிவாஜிதாசன்

**பகுதி - 10**




உலகம் என்னும் பாடசாலையில் மனிதர்களுக்கு தினம் தினம் புது பாடங்கள் அரங்கேறிக்கொண்டே இருக்கும். அதிலிருந்து யாரும் தப்பமுடியாது. ஆண்டி முதல் அரசன் வரை யாராக இருந்தாலும் உலகத்திடம் பாடம் கற்றே ஆகவேண்டும் என்பது எழுதப்படாத விதி. அதில் அலெக்ஸ் பில்லா மட்டும் தப்பிவிடுவானா என்ன? அவன் தன் தந்தையைச் சந்திக்கப்போகும் மகிழ்ச்சியில் இருந்தாலும், மும்பையில் தான் தப்பி வந்ததை எண்ணிப்பார்க்கையில் அவன் மனம் லேசாக நடுக்கம் கொண்டது. தன் தந்தைக்கு, தான் அந்த நிலையிலிருந்தது எப்படித் தெரியும் என்ற கேள்விக்குச் சிறிது நேரத்தில் பதில் தெரிந்துவிடும் என்ற எதிர்பார்ப்பில் தன் தந்தையின் கோட்டைக்குள் சென்றான். அவன் உள்ளே செல்லச் செல்ல மீண்டும் ஒரு புது எண்ணத்தினுள் வீழ்ந்தான்.

'யாரந்த ஜோக்கர்? நம்மைக் கொல்ல நினைத்தவர்கள் யார்? அத்துணை பேரிடமிருந்தும் தன் உயிரை வெகு சாதாரணமாய்க் காப்பாற்றினானே? அவன் நிச்சயமாக சாதாரணமானவன் அல்ல' என்று எண்ணியபடி உள்ளே நுழைந்தார்.

யாருடனோ செல்பேசியில் பேசியபடி நடந்து வந்த சத்யம், அலெக்ஸ் பில்லாவைப் பார்த்ததும் செல்பேசியை அணைத்து அலெக்சை நோக்கி ஓடி வந்தார்.

"அலெக்ஸ்.." என்று முகம் மலர அவனை ஆரத் தழுவிக்கொண்டார்.

அலெக்சும் சந்தோசத்தோடு அவரை அரவணைத்துப் புன்னகை பூத்தான்.

"பிரயாணம் எல்லாம் நல்லபடியா இருந்ததா?" என்று கேட்டார் சத்யம்.

"ம்ம்.. இருந்தது" என்று துன்பப் புன்னகையை மகிழ்ச்சிப் புன்னகையாக மாற்றியபடி, "அப்பா எங்க இருக்காரு? அவர பாக்கணும்" என்றான் அலெக்ஸ்.

சத்யமின் சந்தோஷ முகம் லேசாக வாடத் துவங்கியது. சில வினாடிகள் மௌனத்தோடு அலெக்ஸ் பில்லாவை வெறித்துவிட்டு, "நீ முதல்ல குளிச்சிட்டு சாப்பிடு. அப்பாவ போய் பாக்கலாம்"

சரி என்பது போல் மேலே உள்ள தனது அறைக்குச் சென்று பெட்டியை வைத்துவிட்டு, இளஞ் சுடுநீரில் தன் உடலையும் எண்ணங்களையும் நனைத்து சாதாரண ஆடையை உடுத்தி, சாப்பிட கீழிறங்கி வந்தான். அவன் படிகளில் இறங்க இறங்க சத்யமின் அனல் பறக்கும் சொற்கள் அவன் காதுகளில் விழுந்தன. யாரையோ திட்டித் தீர்த்துக்கொண்டிருந்தார் அவர்.

"உங்களுக்கு அறிவில்லை? உங்களிடம் எவ்வளவு முக்கிய பொறுப்பைக் கொடுத்திருந்தேன்? தவற விட்டுவிட்டோம் என்று சாதாரணமாக சொல்கிறீர்கள்? ஏதாவது ஆபத்து நேர்ந்தால் என்னவாகி இருக்கும்?" என்று திட்டியபடி இருந்தார்.

அலெக்ஸ் படிகளில் இறங்கியபடி, யாரை வசைபாடிக்கொண்டிருக்கிறார் என்ற பார்வையை அங்கே நடக்கும் காட்சியின் மீது வீசினான். சத்யமின் எதிரே ஐந்து வேலையாட்கள் தலை கவிழ்ந்து நிற்க, சத்யம் கர்ஜித்துக்கொண்டிருந்தார்.

"அங்கிள், ஏன் அவங்கள திட்டிட்டு இருக்கீங்க?"

அலெக்சின் குரல் அவர் காதுகளில் விழுந்ததும், சத்யம் பில்லாவை நோக்கி, "நீ எப்படி வந்த அலெக்ஸ்? உன்ன அழச்சிட்டு வர சொல்லி இவங்க கிட்ட சொன்னேன். இவங்க போற வழில டிராபிக் ஆக்சிடெண்ட்னு ஸ்கூல் பசங்க போல காரணம் சொல்றாங்க"

அலெக்ஸ் சிரித்துக்கொண்டே அங்கிருக்கும் டைனிங் டேபிளில் உட்கார்ந்து, என்னென்ன உணவு இருக்கிறது என்று பார்த்தபடி, "நான் டாக்ஸியில வந்தேன். ஆக்‌ஷன் படம் நேர்லயே பாத்துட்டு வந்தேன்" என்றான்.

"என்ன?" என்று அதிர்ச்சியோடு கேட்டார் சத்யம்.

தன்னைக் கொல்ல வந்தவர்களைப் பற்றி இப்பொழுதே கூறி, சத்யமை சங்கடப்படவைக்க விரும்பாத அலெக்ஸ் பேச்சை மாற்ற எண்ணினான். "அங்கிள் எனக்கு பசிக்குது" என்றான்.

சத்யம், தன்னிடம் வசைகள் வாங்கிக்கொண்டிருந்தோரை, நீங்கள் செல்லலாம் என்பது போன்று சமிக்ஞை செய்துவிட்டு, அலெக்சிற்கு உணவு பரிமாறினார். சப்பாத்தியும் வறுத்த கோழியும் வைத்து சாப்பிடுமாறு பணித்தார். அதன் வாசம் அலெக்சின் நாசி துவாரத்தில் நுழைந்து, சுவை அரும்புகளை மலரச் செய்தன. அலெக்ஸ் உணவினை ஒரு கை பார்த்தான்.

பின் கை அலம்பிவிட்டு, சத்யமிடம் "இப்பொழுதாவது

அப்பாவைப் பார்க்கப் போகலாமா?" என்றான்.

"தாராளமா. வா போகலாம்" என்று சத்யம் கூறிக்கொண்டு அலெக்ஸ் பில்லாவை ஓரறைக்கு அழைத்துச் சென்றார்.

அந்த அறையில் பழைய பொருட்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. 'எதற்கு இங்கு அழைத்து வந்திருக்கிறார்' என்று அறையில் உள்ள பொருட்களை நோக்கியபடி யோசித்தான் அலெக்ஸ் பில்லா. சத்யம் அறைக்கதவைத் தாழிட்டு, தன் சட்டைப் பையிலிருந்து ரிமோட் போன்ற ஒன்றையெடுத்து அதிலுள்ள பட்டனை அழுத்தினார். உடனே, "கிர்ர்ர்.." என்ற சத்தத்துடன் தரையில் பதிக்கப்பட்டிருந்த கல் ஒன்று மெதுவே நகர்ந்தது. அலெக்ஸ் விக்கித்துப் போனான். இதுநாள் வரையில் தன் வீட்டினுள் இப்படியொரு சுரங்கப் பாதையைக் கண்டதில்லை என்பதே அவனடைந்த பிரம்மிப்பிற்குக் காரணம். தன்னைப் பின்தொடர்ந்து வரும்படி அலெக்சிற்கு சத்யம் சமிக்ஞை செய்தபடி அந்த சுரங்கப் பாதையினுள் மரத்தாலான படிக்கட்டுகளில் இறங்கினார். அலெக்சும் சத்யமை பின்தொடர்ந்தான்.

கீழே இறங்கியதும், அலெக்ஸ் அவ்விடத்தைச் சுற்றும் முற்றும் நோக்கினான். மரத்தாலான சுவர்களும் அதில் மஞ்சள் நிற ஒளியை உமிழ்ந்தபடி இருக்கும் விளக்குகளையும் பார்த்து, புது உலகிற்குள் தான் சஞ்சரித்துவிட்டதாக எண்ணினான். அந்த இடம் சிறிய கூடம் போலிருந்தது. அந்தக் கூடத்தில் ஒரு நாற்காலியும் ஒரு மேஜையும் போடப்பட்டிருந்தது.

"பில்லா.." என்றார் சத்யம்.

அந்த நாற்காலி சுழன்றது. அதில் பில்லா தோன்றினார். அலெக்ஸ் அதிர்ச்சிக்குள்ளானான். எப்போதும் மலர்ந்த முகத்தோடு இருக்கும் தன் தந்தையின் முகம் சோர்வாக இருக்கிறதே! முகத்தில் சவரம் செய்யாததால் படர்ந்திருக்கும் முடிகள் நுரை போன்ற எட்டிப்பார்த்தன; சாதாரண ஆடை அணிந்திருந்தார்; ஆனால், மிடுக்கும் கூரிய பார்வையும் சீற்றம்கொண்ட முகமும் இன்னும் மாறவில்லை.

தன் மகனைக் கண்ட சந்தோசத்தில் இருக்கையிலிருந்து துள்ளியெழுந்த பில்லா, அலெக்சை நோக்கி வந்து வாஞ்சையோடு அணைத்துக்கொண்டார். அலெக்சின் முகம் தான் வாடிய மலராய்ப் போனது.

"ஏன்பா இங்க இருக்கீங்க?" என்றார் எடுத்த எடுப்பிலேயே.

பில்லா லேசான புன்னகையை விடையாய் அளித்து, "இதெல்லாம் சாதாரணம்" என்றார்.

"அப்பா, உங்க நிலைய பார்த்தா, பெரிய பிரச்சனைல சிக்கி இருக்கீங்க போலிருக்கே" என்றான் மெல்லிய கலக்கத்துடன் அலெக்ஸ்.

பெருமூச்சை வெளியேற்றி இருக்கையின் முன் போடப்பட்டிருந்த மேசையின் ஓர் ஓரத்தில் அமர்ந்து தன் இரு கைகளையும் பிணைத்தபடி அலெக்சை நோக்கினார். 'நீ சொல்றது உண்மை தான்' என்று அவர் பார்வையில் பிரதிபலித்தது அவரின் விடை.

தெளியா மழலை
நீளாச் சுருள் முடி
கொழுக் கன்னங்கள்
மைக் கரு விழிகள்
துறுத் துறு பார்வை
தாய்மைத் தூண்ட
மனதாலே கொஞ்சி
அள்ளி அணைக்க
அருகாய் நெருங்க

துள்ளி ஓடி தாயின்
முந்தானை மூடி
ஒழிந்து மெல்ல
மேகத்துள் முகம்
காட்டும் நிலவாய்
ஏமாந்து ஏங்கினேன்
பேருந்தில் இறங்குமிடம்
வந்து விட்டதால்

- பாண்டிமா -

"எப்பவும் வரது தான். கொஞ்ச நாளுல சரியாய்டும்" என்று தன் மகனுக்கு தைரியமூட்டினார் பில்லா.

"உங்க கிட்ட ஒரு விஷயத்த பத்தி கேக்கணும்"

"என்ன?" என்று தன் கூரிய விழிகளை இன்னும் கூர்மையாக்கி அலெக்சை பார்த்தார் பில்லா.

"நான் இந்தியாவில இருக்கும் போது அங்க நான் பிரச்சனைல மாட்டிக்கிட்டேன். அதுல இருந்து நீங்க தான் என்னை காப்பாத்துனீங்க. எப்படி?" என்றான் அலெக்ஸ்.

பில்லா அதிர்ந்தார். பதில் கூற முடியாமல் சிறிது நேரம் சத்யமை வெறித்தார். பில்லாவின் பார்வையை எதிர்கொள்ள முடியாமல் சத்யம் தன் தலையைத் தாழ்த்திக்கொண்டார்.

"ஏன் அமைதியாவே இருக்கீங்க?" என்று சீறும் பாம்பாய்க் கேட்டான் அலெக்ஸ்.

இதற்கு மேல் உண்மையை மறைத்துப் பயனில்லை என்றுணர்ந்த பில்லா, நடந்தவை அனைத்தையும் கூறத் துவங்கினார்.

முதலில் தன்னுடைய நாய் இறந்து போனது, அடுத்து தன் நண்பன் சஞ்சயும் பலிகடாவானது, டிராகுலா தன்னிடம் சவால் விட்டது, அலெக்சை காப்பாற்ற தான் கொடுக்கும் வேலையை முடிக்கவேண்டும் என்று டிராகுலா கட்டளையிட்டது என எல்லாவற்றையும் கூறினார். ஆனால், டிராகுலாவிடம் தான் நேருக்கு நேர் மோதியதைப் பற்றிக் கூற ஏனோ அவர் விரும்பவில்லை.

அலெக்சின் கண்கள் ஆச்சர்யத்தில் விரிந்தன. புருவங்கள் மேலெழும்பி ஆச்சர்யத்தை இன்னும் விரிவுபடுத்தின. 'தன்னுடைய தந்தையின் கவலைக்கு இது தான் காரணமா? யார் அவன்?' என்று தன் மனதினுள் கேள்விகளை எழுப்பிக்கொண்டான்.

எல்லோரும் நிழலுடன் தான் பயணிக்கின்றனர்
அவர் அவர் உயரத்திற்க்கேற்ப
அவர் அவர் மேல் படும் ஒளிக்கேற்ப

ப.கல்யாண கண்ணன்

பில்லா, "நீ எதுக்கும் கவலைபடாத. இது சின்ன விஷயம். நான் பாத்துக்குறேன். உன்ன எதுக்கு வர சொன்னேனா, இனி நம்ம பிசினஸ நீ தான் பாத்துக்கணும். உனக்கு உதவியா சத்யம் இருக்கார். இரண்டு நாட்கள் கழித்து மாபியா கூட்டத் தலைவர் ஜோசப் எல்லாருக்கும் விருந்து கொடுக்குறாரு. என் சார்பா நீ கலந்துக்க. இது தனி ஒரு ஆளா கட்டின சாம்ராஜ்யம். அத தகர்க்க யார் வந்தாலும் அவங்கள சும்மா விடமாட்டேன்" என்றார்.

பில்லா கூறியதையெல்லாம் தன் மூளையில் ஏற்றிக்கொண்டிருந்தான் அலெக்ஸ். "சரிப்பா நீங்க சொன்னது போலவே செய்றேன்"

பில்லா ஆதரவாய்த் தன் மகனின் தோள்களைப் பற்றினார். "நான் முடிக்கவேண்டிய வேலை ஒண்ணு இருக்கு. அத நிறைவேத்துற நேரம் வந்திடுச்சி" என்றார் பில்லா.

பில்லா கூறியது அலெக்சிற்கு விளங்கவில்லை. அதனால் தன் முகத்தினில் கேள்வி ரேகைகள் படர பில்லாவை நோக்கினான். அப்போது, பில்லாவிற்குத் திடீரென்று இருமல் வந்தது.

அலெக்ஸ் பதறி, தன் தந்தையைத் தாங்கிப் பிடித்து அருகிலிருந்த இருக்கையில் கிடத்தினான். பில்லாவிற்கு மருந்து கொண்டுவர சத்யம் ஓடினார். அலெக்ஸ் செய்வதறியாது கலங்கிய கண்களோடு தன் தந்தையின் நெஞ்சினை மெல்லத் தடவியபடி, "என்னாச்சுப்பா?" என்று கதறினான்.

பில்லா இருமியபடியே, "என் ரூம்ல இருக்க பீரோவில ஒரு துப்பாக்கி இருக்கு. அத எடுத்திட்டு வா" என்றார்.

'இந்நிலையில் எதற்காக துப்பாக்கி கேட்கிறார்?' என்று அலெக்ஸ் முழித்தான்.

"சொன்னத செய்!" என்று பில்லா இருமியபடியே கர்ஜித்ததால், வேறு வழியின்றி தன் தந்தையின் கட்டளையை நிறைவேற்ற அவசர அவசரமாக ஓடினான். விரைவிலேயே தன் தந்தையின் ரூமை அடைந்து அவரின் பீரோவைத் திறந்து பார்த்தான். பில்லா கூறியது போலவே ஒரு துப்பாக்கி இருந்தது. அதை எடுத்துக்கொண்டு தன் தந்தையை நோக்கி ஓடினான்.

சுரங்க அறையில் இறங்கி தன் தந்தையை நோக்கிச் செல்லும்போது சத்யம் கையில் மருந்தோடு மரமென நின்றிருந்தார். அவர் நின்றிருந்த காட்சி அலெக்சிற்கு பீதியைக் கிளப்பிவிட்டது. தன் தந்தைக்கு ஏதேனும் ஆகிவிட்டதா என்று பதற்றத்தோடு இருக்கையைப் பார்த்தான்.

அங்கு பில்லா இல்லை!!!



பில்லா காணாமல் போன பின்பு சரியாக இரண்டு நாள் கழித்து காவல் நிலையம் முன்பு ஒரு கார் வந்து நின்றது. கார் கதவைத் திறந்துகொண்டு ஆறடி உயரம் கொண்ட மனிதன் வெளியில் வந்து, காவல் நிலையத்திற்குள் சென்றான். அந்த பிரம்மாண்ட போலீஸ் கட்டிடத்திற்குள் பல பொதுமக்களும் போலீஸ்காரர்களும் குழுமி இருந்தனர். புகார் கொடுக்க வந்திருந்தவர்கள், கைதிகள் இப்படி பல பேர் முதல் கட்டிடத்தில் இருக்க, அவர்களைக் கடந்து மேல் மாடியை நோக்கி படியில் ஏறினான்.

சில போலீஸ்காரர்கள் அவனைப் பார்த்ததும் 'யாரிவன்? இவ்வளவு மிடுக்காக நடந்து வருகின்றான்' என்ற எண்ணம் கொண்டனர்.

இரண்டாவது மாடியை அடைந்து அவன் எதிரே வந்த ஒரு போலீஸ்காரரிடம், "அசிஸ்டண்ட் கமிஷனர் ஆன்சனைப் பார்க்கணும்" என்று ஒரு சீட்டை போலீசாரிடம் நீட்டினான்.

சீட்டை பெற்றுக்கொண்ட போலீஸ், "காத்திருங்கள் சார்" என்று கூறி ஆன்சனின் அறைக்குள் நுழைந்தான்.

வந்தவன், காத்திருக்கும் நேரத்தை வீணடிக்க விரும்பாமல், அங்கு வேலை செய்துகொண்டிருந்த காவல் அதிகாரிகளை நோட்டமிட்டபடி தன் சிந்தனையை ஓடவிட்டுக்கொண்டிருந்தான்.

சில நிமிடங்கள் கடந்த பின் ஆன்சன் அறைக்குள்ளிருந்து வெளியே வந்த கான்ஸ்டபிள், "அசிஸ்டன்ட் கமிஷனர் உங்களை உடனடியா வர சொன்னாரு சார்" என்று கூறினான்.

வந்தவன், "நன்றி!" என்று கான்ஸ்டபிளிடம் புன்முறுவல் பூத்துவிட்டு, ஆன்சனின் அறையின் அருகே சென்று, கதவைச் சற்று விலக்கி தன் தலையை மட்டும் உள்ளே நுழைத்து, "எக்ஸ்கியுஸ் மீ சார்" என்று சொன்னான்

"உள்ள வாங்க " என்று தன் மேஜையில் இருந்த ஃபைலை பார்த்தபடி சொன்னார் ஆன்சன்.

உள்ளே சென்றான் அவன்.

ஆன்சன், தன் தலையை உயர்த்தி, வந்தவனைப் பார்த்து, "ஹலோ மிஸ்டர் ஸ்டீபன்! வாங்க வாங்க" என்று கூறியபடி இருக்கையிலிருந்து எழுந்து ஸ்டீபனின் கைகளைக் குலுக்கினார்; தன் எதிரே இருக்கும் இருக்கையில் உட்காருமாறு கை காட்டினார்.

## உயிர் போனால் அது உன்மடியில் போகனும்

கே இனியவன்

எனக்கு உயிர் நண்பன் இல்லை
உயிராய் இருந்தவனும் முதுகில்
குற்றி விட்டான் - பதிலாக
இதயத்தில் குற்றியிருக்கலாம்
என்னை கொண்றிருக்காலாம்..!!!

வந்தாய் நீ தந்தாய் அன்பை
உன் அன்பை என்றாலும்
சற்று சந்தேகம் -நீ
நீர் குமிழியா ..? நீர் வீழ்ச்சியா ..?
சற்று தடுமாறியது மனம் ...!!!

உணர்ந்தேன் உன் அன்பை
என்னை விட என் குணங்களை
நன்றாக புரிந்து கொண்டாய்
எனக்கே இருந்த குணத்தை எனக்கே
தெரியாமல் அற்புதமாய் சொன்னாய் ...!!!

உள்ளத்தால் உண்மை சொன்னாய்
உள்ளத்தால் அன்பு தந்தாய்
உள்ளத்தால் கண்ணீர் விட்டாய்
உள்ளத்தால் என்னை வாழ்த்தினாய்
உள்ளமே உள்ளத்தை உயிராய் தந்தாய் ...!!!

உன்னுடைய அன்பால் உயிர் பெற்றேன்
உயிரே போகும் வரை உன்னுடம்
உயிர் நண்பனாய் இருக்க துடிக்கிறேன்
உயிர் போனால் அது உன்மடியில் போக
உயிராய் துடிக்கிறேன் அன்பே நட்பே ...!!!

*ஆன்சன் சுட்டிக் காட்டிய இருக்கையில் அமர்ந்த ஸ்டீபன், ஆன்சனின் முகத்தை சிறிது நேரம் நோக்கினார்.*

*"உங்களைப் பத்தி நிறைய கேள்விப்பட்டிருக்கேன் மிஸ்டர் ஸ்டீபன். இன்ஸ்பெக்டராய் இருந்து பல சட்ட விரோதிகளைப் பிடிச்சி தண்டனை வாங்கிக் கொடுத்திருக்கீங்க. இப்போ இந்த ஏரியாக்கு மாத்தலாகி வந்திருக்கிறதுல ரொம்ப சந்தோசம். ஆனா நீங்க நினைக்குற மாதிரி இருக்காது இந்த இடம்.." என்று கூறிக்கொண்டிருக்கும்போதே இடைபுகுந்தார் ஸ்டீபன்.*

*"எனக்கு தெரியும் சார். இங்க மாஃபியாக்களின் அராஜகம் தான் நடந்துட்டு இருக்கு. மொத்தம் ஒன்பது பேர் மாஃபியா தலைவர்கள். அவர்களுக்கு மேல் ஒரு தலைவன். அவனுடைய பேரு ஜோசப். அவங்களுக்கு கீழ விஷக் கிருமிகள் போல சொன்னா செய்ற ஆட்கள். இவங்க நினச்சா யாரா இருந்தாலும் கொன்னுடுவாங்க. எதுவா இருந்தாலும் அடஞ்சிடுவாங்க. சொல்லப்போனா ஒரு கடவுள் போல இங்க ஆட்டிப்படைக்குறாங்க" என்று மூச்சு விடாமல் கூறிக்கொண்டே போனார் ஸ்டீபன்.*

*வேலைக்கு சேரும் முன்னே எல்லாவற்றையும் தெரிந்து வைத்துக்கொண்டிருக்கும் ஸ்டீபனின் மதிநுட்பத்தை எண்ணி வியந்தார் ஆன்சன்.*

*"எல்லாத்துக்கும் ஒரு முடிவு இருக்கும் சார். இவங்களுக்கும் அது உண்டு. முதல்ல இவங்களுடைய பழைய கேஸ் எல்லாம் தோண்டி நெருக்கடி குடுத்து கூண்டோட பிடிக்கணும். அந்த சந்தர்ப்பத்த உருவாக்கணும். டேவிட் பில்லா, மாஃபியா தலைவன் விக்டர கொன்னதுக்கு ஆதாரம் இருக்கு. நம்ம அதிரடிய அவர் கிட்ட இருந்து ஆரம்பிக்கணும்.." என்று கூறியபடி இருக்கையிலிருந்து எழுந்தார் ஸ்டீபன்.*

*"வெல் டன் மிஸ்டர் ஸ்டீபன். உங்களைப் பாத்தா எனக்கு கொஞ்சம் நம்பிக்கை வருது. அதை காப்பாத்துவீங்கன்னு நினைக்குறேன்" என்று மீண்டும் கைகுலுக்கினார்.*

*"நிச்சயமா சார்" என்று கூறிவிட்டு அங்கிருந்து விடைபெற்றார் ஸ்டீபன்.*

*ஸ்டீபனின் இளமை துள்ளலும் சாதுர்யமும் கண்டிப்பாக மாஃபியா கூட்டத்திற்கு அச்சுறுத்தலாக இருக்கும் என்று எண்ணியபடி ஆன்சன் தான் படித்துக்கொண்டிருந்த ஃபைலில் மீண்டும் மூழ்கினார்.*

*ஸ்டீபன் தன் காரை சாலையில் வேகமாய் ஓட்டிக்கொண்டு சென்றார். அவ்வப்போது சாலையோரம் நடக்கும் மனிதர்களை வேடிக்கை பார்த்தபடி இருந்தார்.*

*அப்பொழுது ஒரு கண்பார்வையற்றவர் சாலையோரத்தில் நின்றுகொண்டு இசைக்கருவியை வாசித்திருக்க, போகிறவர் வருவோர் எல்லாம் தங்களால் முடிந்த உதவியாக பணத்தை அவரின் அருகில் இருந்த உண்டியலில் போட்டுவிட்டு சென்றுகொண்டிருந்தனர்.*

*பார்வையற்றவரின் அருகில் நின்றிருந்த ஜோக்கர், ஸ்டீபனின் காரை பார்த்தபடி பிஸ்கட் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். அவனையே உற்றுப் பார்த்த ஸ்டீபன் சலிப்போடு மீண்டும் சாலையைப் பார்த்தபடி தன் வாகனத்தைச் செலுத்தினார்.*

*ஆனால், ஜோக்கரின் கண்கள் ஸ்டீபன் செல்லும் காரின் மீதே பதிந்திருந்தது..*

***தொடரும்...***

"மின் இதழை படித்து இரசித்தமைக்கு நன்றிகள்"

*தங்கள் பதிவுகள் மின் இதழை சிறப்பிக்க வேண்டுமா?*
*தங்கள் பதிவுகளும் மின் இதழில் பங்கு பெற்று சிறப்பிக்க நாங்கள் விரும்புகிறோம்.*

1. தளத்தில் சிறப்புப்பதிவாக தெரிவு செய்யப்படும் படி சிறந்த கருத்தை வைத்து பதிவுகளை எழுதுங்கள்
2. அதிக புள்ளிகள் பெற்று முதல் இருபது பதிவுகளுக்குள் தங்கள் பதிவுகள் வருமாறு சிறந்த கருத்துகள் கொண்ட பதிவு செய்யுங்கள்.
3. வேறு இடங்களில் பதியப்படாத பதிவுகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

*மீண்டும் வழக்கம் போல அடுத்த மின் இதழில் சந்திப்போம்.*

*இதழையும் தமிழ் நண்பர்களையும் பற்றிய தங்கள் மேலான கருத்துகளை தயவு செய்து info@tamilnanbargal.com என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.*

*நன்றிகள்*
*தமிழ் நண்பர்கள்*
tamilnanbargal.com

